# கட்டுரைப் பத்து



**வித்துவான். அ. மு. பரமசிவானந்தம்,** பி. ஓ. எல்.,
*தமிழ் விரிவுரையாளர்,*
*பச்சையப்பன் கல்லூரி,*
**சென்னை.**

**தமிழ்க்கலைப் பதிப்பகம்,**
*அங்கம்பாக்கம்,*
வாலாஜாபாத் P. O. S. I. R.,

# முன்னுரை

தமிழ் நாட்டில் மொழி உணர்ச்சி மேலிடும் நாள் இது. அறிஞர் பலர் மொழி நலம் கருதிப் பேசியும் எழுதியும் வருகின்றனர். அவர்கள் எழுத்தோவியங்களுக்கு இடையே எனது எழுத்தும் இன்று வெளி வருகின்றது.

தமிழ்க்கலைத் திங்கள் வெளியீட்டில் அவ் வப்போது வெளியிட்ட கட்டுரைகளையும், சில இடங்களில் ஆற்றிய சொற் பொழிவுகளையும் தொகுத்து நூலாக வெளியிட வேண்டுமென்று அறிஞரும் அன்பரும் என்னை ஊக்கினர். அவர்தம் ஆணை வழியே இச் சிறுநூல் இன்று தமிழ் நாட்டில் தவழ முற்படுகின்றது. அறிஞர்கள் இந் நூலை ஏற்று ஆதரிப்பார்களாக!

இந் நூல் வெளிவரும்போது திருத்தத் தொண்டினை விரும்பியேற்று உதவி புரிந்த செங்கற்பட்டுக் கொலம்பா உயர்நிலைப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியர் உயர்திரு. K. M. வெங்கட்ராம ஐயர், M. A., B. O. L., அவர்களுக்கும், இந் நூலை அழகுற அச்சிட்டு உதவிய காஞ்சி, குமரன் அச்சக உரிமையாளர் உயர்திரு. தவசி. குப்புசாமி முதலியார் அவர்களுக்கும் என் நன்றி ஏற்புடைத்து.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!!

தமிழகம்,
அங்கம்பாக்கம்,
29—8—'44.

பணிவார்ந்த,
**அ. மு. பரமசிவானந்தம்.**

# உள்ளுறை


| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 1 | மதிற்கச்சி மாண்பு | 1 |
| 2 | திருவாங்கூர்ச் செலவு | 11 |
| 3 | குமரியின் நினைவுகள் | 20 |
| 4 | அஞ்சுவதியாதொன்றும் இல்லை | 26 |
| 5 | வீரர் வழிபாடு | 37 |
| 6 | இளைஞர் தொண்டு | 45 |
| 7 | நடு நிசி மணி ஒலி | 52 |
| 8 | பண்டைத் தமிழர் அரசியல் | 66 |
| 9 | இயற்கைச் செல்வம் | 73 |
| 10 | என்ன வேண்டும் | 80 |

# மதிற் கச்சி மாண்பு

'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன் தோன்றி மூத்த குடி' எனப் புறப்பொருள் வெண்பா மாலை சிறப்பித்துக்கூறியபடி, மிகப்பழம் பெருங்குடிமக்கள் நம் நாட்டில் வாழ்ந்து வந்துள்ளனர். அறிவு நிறைந்த அப் பழங்குடி மக்கள் வாழ்விலும் நாகரிகத்திலும் தலை சிறந்தவர்களாய் விளங்கிய காலத்துத் தம் நாட்டைத் தாமே ஆண்டார்கள். அவ்வாறு ஆண்டவர்கள் தலை சிறந்த நகரங்களை ஆக்கிக்கொண்டனர். முடியுடை வேந்தர் மூவரும் தமிழ் நாட்டை முப்பிரிவாகப் பிரித்து ஆண்டனர். அவரவர்கட்குத் தனித் தனித் தலைநகரங்களும், குடை, இலச்சினை, மாலை முதலியனவும் அமைந்திருந்தன. 'கயலோங்கிய இமயநெற்றியில், அயலோங்கியபுலியும் வில்லும்' என அவர்தம் முக்கொடிகளும் புகழப்பட்டுள்ளன. இமயம் வரை உள்ள நாடுகளை வென்று முப்பெரு வேந்தரும் தத்தம் இலச்சினைகளை இட்டனர் என்பது இதனால் தெரிகிறதன்றோ!

பாண்டியர் தமிழகத்தின் தென் கோடியையும், சேரர் மேற்பக்கத்தையும், சோழர் பிற இடங்களையும் தமதாக்கி ஆண்டுவந்தனர். சோழர் தலை நகரங்கள் ஒரு சில சிறந்தனவாக விளங்கின. பல நாட்டு மக்களும் பண்டம் பகர்ந்து வந்த வளஞ்சான்ற காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்ட பிறகு சோழர் உள்நாட்டு நகரங்களைத் தலை நகர்களாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர். அவற்றுள் ஒன்றாக விளங்கியது காஞ்சிப் பதியாகும்.

கச்சியானது உண்டான விதத்திற்குப் பல காரணங்கள் கூறப்பட்டுள்ளன. காதளவிலே கதைகளாக உள்ளன சில. சோழ மன்னன், நாக கன்னிகை மூலம்பெற்ற இளந்திரையன் என்னும் இளவல் கடலில் மூழ்கினன்

என்பதைக் கேட்டபின், மனமுடைந்து தான் செய்து வந்த இந்திர விழாவை மறந்தமையின், காவிரிப்பூம் பட்டினம் கடலால் கொள்ளப்பட்டது என்றும், கடலில் வீழ்ந்த இளந்திரையன் கரை சேர்ந்து, காஞ்சி கண்டு, அதைத் தலைநகராக்கி அரசியல் நடத்தினன் என்றும் கூறப்படுகின்றது. காஞ்சி மரங்கள் நிறைந்த காடாக இருந்தமையின், இதற்குக் காஞ்சி என்னும் பெயர் உண்டாயிற்று என்றும் அறிகிறோம். இளந்திரையனுக்குத் தொண்டைமான் என்ற பெயர் இருந்ததென்றும், அவன் ஆண்டதால் இந்நாடு தொண்டைநாடு என்று அழைக்கப் பட்ட தென்றும் ஒரு வரலாறு உண்டு.

இக்காஞ்சி என்னும் பெயர் வழக்கினை நோக்குவாம். இன்று இது காஞ்சிபுரம் என்று அழைக்கப்படுகின்றது. இது பழைய காலத்தே காஞ்சி யென்றும் கச்சி என்றும் அழைக்கப் பட்டதாக இலக்கியங்கள் சான்று பகர் கின்றன. பிறநாட்டு மக்கள் தமிழகத்தில் குடியேறித் தத்தமது நாகரிகம் முதலியவற்றைப் புகுத்திய காலத்து, ஊர்ப்பெயர்களையும் உருமாறச் செய்தனர். வடமொழி மிகுதியாகக் கலந்த காலத்து, ஊர்ப் பெயர்களை வட மொழிப் பெயர்களாக மாற்றினர். 'மயிலாடு துறை' என் னும் அழகிய பெயரை மாயூரகிரி என ஆக்கிப் பிறகு மாயவரம் என வழங்கியது போன்றும், திருமறைக்காடு என்பதை வேதாரணியம் என வழங்கியது போன்றும், காஞ்சியையும் வடமொழிப்பெயராக்க முயன்றனர். ஆனால் அதற்கென வடமொழிப் பெயர் காணு வகையினராய், காஞ்சி என்ற தமிழ்ப் பெயரோடு, 'புரம்' என்ற வட மொழிப் பெயரைச் சேர்த்து வழங்கினர். அதன் பிறகு இது காஞ்சிபுரம் என வழங்கலாயிற்று. தென் இந்திய இருப்புப் பாதையார் அதைக்' 'காஞ்சீவரம்' என ஆக்கி னர். இம்மாறுபாடு எல்லாம் நீங்கித் தமிழ்ப்பெயர் தழைத் தோங்குவதாக.

நிற்க, இக்காஞ்சி நகரம் பழம் பெருஞ் சிறப்பு வாய்ந்தது. இக் காஞ்சி அமைப்பைப் பற்றியும், அழகைப்

பற்றியும் பல தனிப்பாடல்கள் உள்ளன. தவிர, பெரும்பாணாற்றுப்படையிலே தொண்டைமான் இளந்திரையனைப்பாடிய உருத்திரங் கண்ணனார் அவனைப் புகழ்வதன் மூலம் அவன் தலைநகராம் காஞ்சியின் சிறப்பை நன்கு விளக்கிக் காட்டியுள்ளனர். மற்றும் மணிமேகலை என்னும் அறப்பெருஞ் செல்வி காஞ்சிப் புகுந்த ஞான்று, அவள் கண்ட காஞ்சிக் காட்சியை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் அப்படியே படம் பிடித்தாற்போல் காட்டுகின்றார். இவைகளை யெல்லாம் உற்று நோக்குவார், உள்ளம் மகிழ்வர் என்பது உறுதி.

காஞ்சிக்கும் கடலுக்கும் உவமை கூற வந்த ஒரு பெரியார், "இரண்டும் ஒன்றை ஒன்று ஒத்திருப்பனவேயாயினும் ஒன்றில் மாறு படுகின்றன; கடலில் விளைவனவெல்லாம் காஞ்சியில் உள; ஆனால், காஞ்சிப் பொருள்களையெல்லாம் கடலில் காண முடியாது" எனக் கடலின் மென்மை நிலையில் காஞ்சியைச் சிறப்பிக்கின்றார்.

'மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையான் ஒக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும்'

என்பது அது. மற்றொரு அறிஞர் காஞ்சியைக் கற்கண்டென அறிவிக்கின்றார்.

'வையகமெல்லாம் கழனியா வையகத்தின்
செய்யகமே நாற்றிசையின் தேயங்கள் செய்யகத்தின்
வான்கரும்பே தொண்டைவளநாடு வான்கரும்பின்
சாறே அந்நாட்டுத் தலையூர்கள் சாறட்ட
கட்டியே கச்சிப்புரமெல்லாம் கட்டியுள்
தானேற்றமான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி அகம்'

என்ற செய்யுள் எண்ணுவார் இதயத்துக்கு இன்பம் விளைப்பதொன்றாகும்.

இவ்வாறு தனிப்பாடல்களால் புகழப்பட்ட தகைசால் காஞ்சியானது பத்துப்பாட்டுள் ஒன்றினால் பெரிதும் பேசப்

படுகின்றது. பெரும்பாணாற்றுப்படையின் ஆசிரியர், தொண்டைமான் இளந்திரையனைப் பாட வந்தபோது, அவன் அரசாண்ட தலைநகராம் இக்காஞ்சியையும் போற்றிப் புகழ்ந்தனர்.

'நீனிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்
இழுமென் புள்ளின் ஈண்டுகிளைத் தொழுதிக்
கொழுமென் சினைய கோளியுள்ளும்
பழமீக் கூறும் பலாஅப் போலப்
புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய
மலர்தலை உலகத் துள்ளும் பலர்தொழ
விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்'

என்று கச்சி நகரின் மாட்சியை நன்கு விளக்கிக் காட்டினார்.

இதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய உரை சாலச் சிறந்ததாகும். அது ஆசிரியர் கருத்தை நன்கு காட்டுவதாகும். "நீல வண்ணமான வடிவினையுடைய திருமாலின் கொப்பூழிடத்து மலர்ந்துள்ள நான்கு முகங்களை யுடைய பிரமனைப் பெற்ற, பல இதழ்களோடு கூடிய தாமரை மலரின் நடுவே உள்ள பொகுட்டினைப்போல (முகை) எல்லோரும் காணும்படி விளங்கிய, செங்கல்லினாலே கட்டப்பட்ட மதிலையுடைய நீண்ட நகர் எல்லையில், இழுமென்னும் ஓசையையுடைய புள்ளின் சுற்றமாகிய கூட்டம் கொழுவிய மெல்லிய கிளையிலே தங்கியிருக்கின்ற தன்மையுடைய பூவாது காய்க்கும் மரங்களினுள்ளே தலைசிறந்த பலவகைப்பட்ட பழங்களைவிட மேலாகக் கூறும் பலாப்பழத்தை யுடைய மரம்போல, புலால் நாற்றத்தை யுடைய கடலை ஆடையாக உடுத்த ஆகாயமாகிய முடியணிந்த பரந்த இடத்தை யுடைய உலகத்துள்ளே பலரும்

கதொழும்படியான திருவிழாக்கள் மலிந்த, தொன்று தொட்டுப் பெருமை வாய்ந்த பழமையான ஊராகிய, கச்சி" என்பது அவ்வுரையாகும். இதில் காட்டும் உவமை நயம், கற்றறிந்தோர்க்குக் கவின்பெறுநலம் பயப்பதாகும்.

நிற்க, ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய மணிமேகலையில் இக்காஞ்சிநலம் பலவாக எடுத்து விளக்கப் பட்டுள்ளது. மதில் சூழ் வளனும், காவலர் காவலும், கடைத் தெருவின் கவினும், பல்வேறு தொழிலாளர் பயிலும் இடத் தன்மையும், இசைவாணர் முதலிய அறிஞர் அறிந்துறையும் இருக்கையின் இனிமையும், நவமணி விற்கும் நலமும், இளமரம் நிறைந்த சோலையின் இனிமையும், நீர்த்துறை நேர்மையும், பொது மண்டபங்களின் பொலிவும், அறிஞர் கலந்துறை ஆலய அழகும், சாலைச் சிறப்பும் அழகுறச் சாத்தனாரால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இம் மணிமேகலை காலத்துக்கு முன்னிருந்தவன் சோழன் கரிகால் பெருவளத்தான். அவன் ஆற்றல் மிகுந்தவன். அதுகால் தொண்டைநாடு 'அருவாவடதலை' நாடு என்று அழைக்கப்பட்டுள்ளது. பல நாடுகளையும் வெற்றி கொண்டு வந்த கரிகாலன் காஞ்சிக்கு வந்தான். காஞ்சி நாட்டைக் கைக் கொண்டான். அக்காலத்தே காமக் கோட்டத்தே திருப்பணி செய்து கொண்டிருந்த சாத்தனார் என்பார் கரிகாலன் திறங்கண்டு செண்டு கொடுத்தார் என்றும், அச்செண்டு கொண்டு பிறகு இமயப் படையெடுப்பில் இமயத்தை எறிந்தான் என்றும் ஓர் வெண்பா சான்று பகர்கின்றனது. அவண் செண்டு கொண்டு இமயத்தை எறிந்ததைக் கலிங்கத்துப்பரணியும் வலியுறுத்தும்.

"செண்டு கொண்டுகரி காலனொரு காலிலிமயச்
சிமயமால் வரை திரித்தருளி மீளவதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது என்று முதுகிற்
பாய்புலிப் பொறி குறித்தது மறித்த பொழுதே."

என்பது அது

சோழன் கரிகாற்பெருவளத்தான் காடு கொன்று நாடாக்கிக் குளம்தொட்டு வளம் பெருக்கி மக்களைப் பல விடங்களிலும் குடியேற்றியவன். அவ்வாறே தொண்டை நாட்டையும் தூயதாக்கி இருபத்து நான்கு கோட்டங்களை உண்டாக்கி அவற்றில் வேளாளரைக் குடியேற்றினன். அவர்களே இன்று 'தொண்டை மண்டல வேளாளர்' என அழைக்கப்படுகின்றனர். அவர்களுக்குள் இன்றும் கோட்டப்பிரிவு பேசப்படுகின்றது.

இவ்வாறாகச் சங்கப்புலவர்களும் பிறரும் பலவாறு புகழ்ந்து போற்றிய இக்காஞ்சியானது சமயத் துறையிலும், பிறவற்றிலும் தலைசிறந்து விளங்கிற்று. ஒருகால் இங்கு ஆயிரக்கணக்கான பௌத்தமடங்களும், பதினாயிரக்கணக்கான பௌத்தத்துறவிகளும் இருந்தனர் என்று சீன யாத்திரிகரான யுவான் சுவாங் குறித்துச் சென்றார். இன்னும் அவர் கூறியவற்றிலிருந்து பலவாகக் காஞ்சிப்பண்புகளைக் காணலாம். யுவான் சுவாங் இந்தியா வந்த காலத்து வடக்கே ஆண்ட அரசன் ஹர்ஷவர்த்தனன். அக்காலத்துக்காஞ்சி, பல்லவ அரசர்களால் ஆளப்பட்டது. காஞ்சி நகரம் பல்லவர்களது தலைநகராக விளங்கிற்று. அப்போது சீனயாத்திரிகன் காஞ்சிக்கு வந்து இதன் சிறப்பை வியந்து போற்றியுள்ளான். அதுபோழ்து காஞ்சியில் ஆண்ட பல்லவன் முதலாம் நரசிம்ம வர்மன் என்று 'வின்சென்ட் ஸ்மித்' என்னும் சரித ஆசிரியர் காட்டுகின்றார். காஞ்சி, ஆயிரக் கணக்கான கல் சுற்றளவுள்ளதும் வடக்கே பெண்ணையாற்றையும் தெற்கே வெள்ளாற்றையும் எல்லையாகக் கொண்டதுமாகிய திராவிட நாட்டுத் தலை நகராக விளங்கியதென்றும், இது ஆறு கல் சுற்றளவுடையதென்றும், பௌத்த மதம் ஈண்டுக் கால்கொண்டிருந்ததென்றும் அவர் நூலில் கூறப்படுகின்றது.*

---

* Hiuen Tsang who visited Kanchi in the year 640 A. D. during the reign of Narasimha Varman I, and stayed there for a considerable time, calls, the country of which Kanchi was the capital by the name of Dravida, and describes it

நிற்க, சிறந்த அரசர்கள் வடநாட்டில் ஆண்டு வந்த போது இந்தியாவைத் தன்னடிக் கீழ்ப்படுத்த விழைந்த காலத்து, அவர்கள் ஆட்சி பெண்ணையாற்றுக்கு அப்பாலேயே அமைந்தது. பின்னால் ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தே நடு இந்தியாவில் அரசாண்ட இரண்டாம் புலகேசி காஞ்சியின் மதிற்சிறப்பைக் கண்டு மலைந்தான். பல்லவனால் தோற்கடிக்கப்பட்டான்.

பல்லவர் காலத்திலே தான் சரித்திரத்தில் காஞ்சி புகழ் பெறலாயிற்று. சீன யாத்திரிகனும் இக்காலத்தில் தான் இங்கு வந்து சென்றான். சைவ சமயம் வளர்ச்சியுறச் சிறந்த காரணராயிருந்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூன்று சமயாசாரியர்கள் வாழ்ந்த காலமும் இதுவாகும். அவர்கள் வந்து, காஞ்சி அழகு கண்டு, ஆண்டவன் அருட்புகழையும், நகரின் நலத்தையும்

as being about a thousand miles in circuit. It corresponded, therefore, very closely with the traditional 'Chola country' between the Northern Pennar and the Southern Vellar rivers. The soil was fertile and regularly cultivated, producing abundance of grain, flowers and fruits. The capital was a large city five or six miles in circumference. In the Kingdom the pilgrim found several hundreds of Buddhist monasteries, occupied by a large number of monks, estimated at ten thousands, all attached, like the majority of the Ceylonese, to the Sthavira School of the Mahayana. The Hindu temples numbered about four score, and, as in the other parts of Southern India, the sect of nude, or Digamuara, Jains had many adherents. In the Pandya country farther South Buddhism was almost extinct. Kanchi enjoyed special fame among the Buddhists as having been the birth place of Dharmapala, a celebrating metaphysician, who was the predecessor of Hiuen Tsang's teacher Silabhadra in the headship of the great monastery at Nalanda.

(*V. Smith*)

நாவாரப் பாடியுள்ளனர். 'நலம்ஆர் கச்சி' 'கருமுகில் தவழும் மாடக்கச்சி' 'பொழிலார் கச்சி' 'நீள்மருகில் கலிக்கச்சி' 'கல்வியைக் கரையிலாத காஞ்சி' என்பன அவர்கள் காஞ்சியைச் சிறப்பித்துக் கூறும் பகுதிகளில் சிலவாகும். ஆழ்வார்களும் அக்காலத்திலேயே அரிய பாடல்களைப் பாடியுள்ளனர். தமிழிடம் அடங்கா அன்புகொண்டு தமிழ்க்கெனவே உயிரை விட்ட 'நந்திப் போத்தரையன்' ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் ஆண்ட பல்லவன் என்று சொல்லப்படுகின்றான். 'நந்திக் கலம்பகத்தால் மாண்டதை நாட்டியும்' என்பதால் நாம் அவைகளைப்பற்றியெல்லாம் கண்டு விளக்க வேண்டுவதில்லை. தமிழ் வளம் கேட்க வேண்டுமென்ற ஆவலினால், தமிழ் நலம் பேணவேண்டுமென்ற ஆவலினால், தன் உயிரை மதியாது இறந்த மன்னன் பெருமையையும் அவன் புகழ் பற்றிய நந்திக்கலம்பகத்தையும் நாமெல்லாம் சிறிது நினைத்தலும் சாலும்.

'வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
வையக மடைந்ததுன் கீர்த்தி,
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்
தேனுறு மலராள் அரியிடம் சேர்ந்தாள்
வெந்தழல் புகுந்ததுன் மேனி
யானுமென் கலியும் எவ்விடம் புகுவோம்
எந்தையே! நந்தி நாயகனே!'

என்பது அக்கலம்பகத்தின் ஈற்றுப் பாடல்.

பல்லவர்களே கற்கோயில் கட்ட ஆரம்பித்தனர் என்பது சரித உண்மை. மகேந்திரவர்மன் முதன் முதல் மலைகளைக் குடைந்தே அவைகளில் கோயில்களை அமைத்தான் என்றும், அதற்குப்பின் வந்தவர்கள் கற்களை அடுக்கிக் கோயில்களைக் கட்டினார் என்றும் கூறுகின்றனர். திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலில் 'பல்லவர் வெட்டிய கல்வெட்டு ஒன்றும், உருவங்களும் காணக் கிடக்கின்றன. பல் நாட்டவரும் வியந்து போற்றும் மகாபலி

புரம் 'மாமல்லன்' என்னும் நரசிங்கப் போத்தரைய னாகிய பல்லவ அரசனால் கட்டப்பட்டது. அவர்கள் காலத் திய பல கல்வெட்டுக்களும், செப்புப் பட்டயங்களும் காணப் படுகின்றன. கூரம் என்னும் ஊரிலுள்ள பெருமாள் கோயி லில் காணும் ஓர் சாசனம் சரித உண்மைகளை நமக்கு எடுத்து விளக்குகின்றது. இவ்வாறு வளம் பெற்று வாழ்ந்த பல்லவர்கள் 10-ம் நூற்றாண்டு வரையில் அரசாண்டனர். அவர்கள் அரசாண்ட காலத்துக் காஞ்சி நகரும், தொண் டைநாடும் எல்லா வகையிலும் ஏற்ற முற்று விளங்கிய தென்பதை அறியாதார் யார்? பல்லவர் ஆட்சிவளனை மேலும் விளக்கத் தொடங்கின் அது தனிக்கட்டுரையாகும்.

மற்றும், பல்லவராட்சி பல்வேறு வகையாக அடக்கப் பட்ட பிறகு சோழர்கள் சிறிது கிளம்பினர். வடக்கே சளுக்கியரும் தலைகாட்டினர். இராஜ ராஜ சோழன் முதலியோர் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்த காலத்து அவர்கள் காஞ்சிக்குத் தனிப்பெருமை தந்துப் போற்றினர். காஞ்சியின் பக்கத்தே பலதானங்கள் செய்துள்ளனர். அவர்களது கல்வெட்டுக்கள் பல காஞ்சி யிலும், சுற்றுப்புறங்களிலும் அகப்படுகின்றன. பிற் சோழர் காலத்தும் சிறப்புற்றிருந்த காஞ்சியும், தொண்டை நாடும் சிலகாலம் கழிந்து நாயகர் வமிசத்தார் முதலிய வேறு சிலர் கைப்பட்டது. அவர்களும் இவற்றைத் தக்க காப்போடு பெருமைப் படுத்தி வந்தனர்.

மேலை நாட்டு மக்கள் நம் நாட்டு வாணிபத்துறையில் வந்து சேர்ந்த காலத்துக்குப் பின்பே சென்னை நகரம் ஆக்கப்பட்டது. அப்போதும் காஞ்சி தன் பண்டைப் பெருமை குறையாது விளங்கிற்று. பின்னர் மகமதிய மன்னர்களுக்கும், ஆங்கிலேயருக்கும் நடைபெற்ற யுத்தங் களிற் சில, காஞ்சியைச் சார்ந்த சிற்றூர்களில் நடைபெற் றுள்ளன.

இன்றும் இக்காஞ்சி தன் வனப்புக் கெடாததாய், பண்டைப் பெருமையோடு, அறப்பெருஞ் செல்வியாம்

உமைதங்கும் காமக்கோட்டத்தை நடுவிற் கொண்டதாய், பல சைவவைணவக் கோயில்களைக் கொண்டதாய்ச் சிறப்புற்று விளங்குகின்றது. ஆங்கில அரசியல் அமைப்பின்கீழ் இது நகராண் கழகத்தாரால் இன்று பாதுகாக்கப்படுகின்றது. பல்வேறு கைத்தொழில்கள் பண்டைக்காலத்தே சிறப்புற்று நின்றன போன்று இன்றும் நெசவுத் தொழிலுக்குக் காஞ்சி பேர் பெற்று விளங்குகின்றது. இதன் நலம் என்றும் புவியில் பொங்குக என்று வாழ்த்துதும். வாழ்க என்றும் வளம்சால் காஞ்சி! தமிழ்சேர் காஞ்சி தழைத்தினி தோங்குக!!

# திருவாங்கூர்ச் செலவு

மலை நாடு காண வேண்டுமென்னும் மகிழ்ச்சி மேலீட்டால் நானும் என் நண்பர் ஒருவரும் திருவாங்கூர்ச் சீமையைக் காணப் புறப்பட்டோம். திருவாங்கூர் என்று சொல்லும்போதே உள்ளத்தே இன்ப ஊற்றெடுக்கின்றது; இன்றும் அங்கு மக்கள் அரச வணக்கத்தை 'வஞ்சிப் பதிகம்' என்னும் பெயரால் பாடி, வஞ்சிக் கோவை வணங்கும் முறை மனத்திற்கு மகிழ்ச்சி தருவதாகும். வஞ்சி என்னும்போது நம் மனது நம்மை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஈர்த்துச் செல்லுகிறது. சேரன் செங்குட்டுவன் சிறக்க விருந் தரசுபுரிந்த வஞ்சிப்பதி தற்போது எங்கே உளது எனச் சிந்தை தேடுகிறது. சிலப்பதிகாரத்தே வஞ்சி நாட்டு வளனையும் அம்மலை நாட்டில் விளையும் பொருளையும் அணி அணியாக அழகுபடக் கூறுகின்றனர் இளங்கோவடிகள். மலைபடு பொருள்கள் இவை என அளந்தறியும் தன்மைத்தாக அவை விளங்குகின்றன. அவை எவை என நாமும் அறிதல் நலமாகும்.

வஞ்சிவாழ் செங்குட்டுவன் மலை வளங்காண விரும்பிச் சேனை சூழ மனைவியார் கோப்பெருந்தேவி உடன்வரக் காடிடைக் கலந்த மலையினைச் சேர்கின்றான். பேராற்றங் கரைமேல் பிறங்கிய காட்சி அவன் உள்ளத்தை ஈர்க்கின்றது. அந்நலம் கண்டு செம்மணல் எக்கரில் சிறக்க வீற்றிருக்கின்றான். அச்சமயத்தே மலையினிடத்தே மற்றோர் சாரலில் மலைவாழ் வேடுவர் கண்டறியாக் காட்சி ஒன்றைக் காண்கின்றனர். விண்ணிருந்து பொன் விமானம் வர அதிலிருந்து கணவனுடன் ஒரு முலை இழந்த திருமா பத்தினி—கண்ணகிதேவி ஏறி விண் சென்ற தெய்வக் காட்சியைக் காண்கின்றனர் வேடுவர். கண்டதைக் காவலனுக்கு அறிவிக்க விழைகின்றனர். அரசனை வெறுங்கை

யோடு காணுதல் தக்கதன்று என உணர்கின்றனர். கையுறைப்பொருள்களோடு காணச் செல்கின்றனர். அக்கையுறைப்பொருள் கூறு முகத்தான் இளங்கோ அடிகள் மலைநாட்டு வளங்களை நன்கு விளக்குகிறார்.

"யானை வெண்கோடும் அகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியும் மதுவின் குடங்களும்
சந்தனக் குறையும் சிந்துரக் கட்டியும்
அஞ்சனத் திரளும் அணியரி தாரமும்
ஏல வல்லியும் இருங்கறி வல்லியும்
கூவை நீறுங் கொழுங்கொடிக் கவலையும்
தெங்கின் பழனும் தேமாங் கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்
காயமும் கரும்பும் பூமலி கொடியும்
கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்
ஆளியின் அணங்கும் அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்
குரங்கின் குட்டியும் குடாவடி உளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்
காசறைக் கருவும் ஆசறு நகுலமும்
பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேமொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்கள் தலைமிசை கொண்டாங் (கு)
ஏழ்பிறப் படியேம் வாழ்க நின்கொற்றம்."

என வாழ்த்தினர் என்பது இளங்கோவடிகள் வாக்கு.

இவ்வாறாக இயற்கை வளம் வாய்ந்த வஞ்சி நாட்டைக் காணப்போகிறோம் என நாங்கள் எண்ணும்போது புகை வண்டியும் செங்கோட்டை நிலையத்தை விட்டுப் புறப்பட்டது. செந்தமிழ் சிறந்து போற்றும், நெஞ்சை அள்ளும் விஞ்சிய சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகள் வீற்றிருந்து விளங்கிய சேரநாட்டைச் சேரப்போகின்றோம் என்ற எண்ணம் என் சிந்தையை ஈர்த்தது. ஆதி உலாவியற்றிக் கைலாயத்தே கணத் தலைவராயமர்ந்த

எம் சேரமான் செம்மையோடு அரசியற்றிய நாடு நண்ணு கின்றோம் என நயந்தேன். 'உரைசால் பத்தினிக்குயர்ந் தோர் ஏத்தல்'ஆகிய பத்தினித் தெய்வ வழிபாடு முதன் முதலாகச் சிறந்த—சேரன் செங்குட்டுவன் சிறக்க வீற்றரசு புரிந்த—சேர நாடு செல்வோமெனச் சிந்தை மகிழ்ந்தேன். எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பதிற்றுப்பத்தின் தலைவர் பண்புடன் வீற்றிருந்த வீறு பெற்ற நாடு நோக்கி நடப் பதை எண்ணி நயந்தேன். திருவாங்கூர் சீமைக்கும், திருநெல்வேலிக்கும் செம்மைசால் கோடாக—எல்லையாக உள்ள செங்கோட்டையை அண்மினேன். 'வென் வேலான் குன்றில் விளையாட்டேனும் யான்' என்று கண்ணகித் தெய்வம் விரும்பிய குன்றுடைய நாடு நோக்கி நயந்தேன். என் சிந்தனைச் செலவுக்கு இயைந்த புகை வண்டியும் செங்கோட்டை நிலையத்தை விட்டுக் கிளம் பிற்று.

செங்கோட்டையை அடுத்து வானளாவிய வரைகள் காட்சி அளித்தன. சிறுமலைக் குன்றுகளும், பெருமலை அடுக்கல்களும் வரிசை வரிசையாகக் காண்போர் கண்ணை யும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தன. தொடர் தொடராக இலங்கும் கருமலைக் காட்சியும், மலைகளின் மேல் பச்சைப் பசேலெனப் பசும்புல் விரிந்தன இலங்கும் காடும், அவற்றின் மேல் தவழ்ந்து செல்லும் மஞ்சின் காட்சியும், அவைகளுக்கெல்லாம் மேலாகக் காய்கதிர்ச் செல்வன் கதி ரொளி இடையறாது வீசிய இனிமையும் எழில் மிகுப்பன வாயின. இவ்வாறு கதிரொளியும், மஞ்சின் கொஞ்சலும், மரங்களின் அடர்த்தியும் கொண்ட அண்ணாந்த மலைத் தோற்றம் ஆங்கிலப் பேராசிரியர் "கோல்டு ஸ்மித்" அவர்கள் எழுதிய அடிகளை என் நினைவிற்குக் கொணர்ந்தது.

"His ready smile a parent's warmth exprest;
Their welfare pleas'd him, and their cares distrest
To them his heart, his love, his griefs were given,
But all his serious thoughts had rest in Heaven
As some tall cliff, that lifts its awful form,

Swells from the vale, and midway leaves the storm,
Tho' round its breast the rolling clouds are spread
Eternal sun shine settles on its head.

என்பன அவ்வடிகள். அவ்வடிகளின் கருத்தென்ன? மலைநிலையும் மாண்புடையார் உயர்நிலையும் ஈண்டு ஒன்று படுத்திக் காட்டப்படுகின்றன. மரஞ்செடி கொடிகளும், மஞ்சின் கோவையும் இடையில் இருப்பன போன்று உள்ளத் துறவியின் வாழ்க்கையில் பல்வேறு பிணையல்கள் பற்றியிருக்கும். ஆனால், அம்மலை உச்சியில் மறையாக் கதிரொளி மன்னுதல் போன்று, துறவியின் மனமும் மாயா அருள் நிலையில் மன்னி வீற்றிருக்கும் என்பது இவ்வடிகளின் பொருளாகும்.

இவ்வாறு உயர் பொருளை உலகுக்கு விளக்க ஓங்கும் மலைத்தொடரைக் கண்டு கொண்டே செல்லுங்கால் அத்தொடருள் புகைவண்டித் தொடர் புகுந்தது.

அடுக்கடுக்கென அமைந்த மலைத் தொடரினூடே மேடு ஏற ஏற மெதுவாகச் சென்ற புகை வண்டி மலைப் பாம்பை நிகர்த்தது. வளைந்து வளைந்து செல்லும் அவ்வண்டிப் பாதை அப்பைந்தழை கலந்த கானில் அழகொடு விளங்கிற்று. மலைகளின் நடுவே வளைந்து வளைந்து செல்லும் புகை வண்டியிலிருந்த அனைவரும் வெளியிலுள்ள இயற்கைக் காட்சிகளை அள்ளி அள்ளிப் பருகிப் பருகி மகிழ்ந்து மகிழ்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து நெஞ்ச முருகினர். உயர்ந்த மலைத்தோற்றமும், அம்மலையிடத் தமைந்த சிறந்த பசுமை பொருந்திய மரத்தோற்றமும், அம்மரங்களிடையில் சலசலவென்று ஓடும் கானாறுகளின் தோற்றமும், ஒரு புறத்தே ஆழ்ந்த பள்ளத்தாக்கின் தோற்றமும் காண்பார் கருத்தைக் கவர்ந்தன. விலை உயர்ந்த மரங்களும், விளை பொருள்களும் அக்காடுகளிடை விளங்கின. மலைப் பக்கம் ஒருசால் மிளகு பயிரிடுவதைக் கண்டோம். பள்ளத் தாக்குகளில் பாக்குமரச் சோலைகள் அசைந்தாடுதல் பசுங் கடலிடை எழுந்த அலைகளை ஒத்து விளங்கியது. அவைகளில்

பழுத்துத் தொங்கும் காய் கண்ட நாங்கள் பசுங்கடலிடைப் பொற்கட்டிகள் பொலிகின்றனவோ என ஐயுற்றோம். வானளாவிய மலையிடத்திருந்து வரும் வளஞ்சால் பொருளெல்லாம் திருவாங்கூர்ச் சீமையை அழகு படுத்துதல் கண்டு மகிழ்ந்தோம். அம்மலையிடத்தும், மலையடுத்த காட்டிடத்தும் மலைவாழ் மக்கள் விலங்குகளுக் கஞ்சாது வீரவாழ்க்கை புரிவதைக் கண்டோம். அவைகளுக்கெல்லாம் மேலாக மனிதனின் கைவண்ணத்திறன் ஒன்று காட்சி அளித்தது. வளர்ந்தோங்கிய மலையைக் கடக்கலாற்ற புகைவண்டியை மறுபுறம் கொண்டுசேர்ப்பது ஒரு குடைந்தெடுத்த குகையாகும். அரைமைலுக்கு அதிகமாக அக்குகைக்குள் புகைவண்டி புகுந்து செல்லும் போது, அம்மம்ம! மானிடக் கைவண்ணத் திறனைக் கருதாதார் யார்? இயற்கை அன்னையின் உயர்ந்த மலையைக் குடைந்து குகையாக்கி வழியமைத்த மக்கள் திறன் மதிக்கற் பாலதன்றோ? இவ்வாறு இறை அளித்த இயற்கை வளத்தையும், மனிதனது கை நலத்தையும் கண்டு கண்டு மலைத்தொடர் கடந்து மறுபுறமடைந்தோம். கொல்லம் புகைவண்டி நிலயத்தை மாலை 4-மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கிருந்து புகைவண்டி திருவனந்தபுரத்திற்கு மேற்குக் கடற்கரை ஓரமே சென்றது. மலைவளங்கண்ட நாங்கள் கடல் வளங்கண்டோம். கருங்கடல் வளத்துக்கு முன் பசுங்கடல் எம்கண்முன் தோன்றியது. எங்கு நோக்கினும் அடுக்கடுக்காயமைந்த தென்னஞ்சோலையும், கமுகஞ் சோலையும் காணப்பட்டன. பசும்பட்டு விரித்தாற் போன்ற புற்றரைகளும் ஆங்காங்கே புலப்பட்டன. திருவாங்கூர்ச் செல்வமாய்த்திகழும் தென்னையையும், கமுகினையும் அவைகலந்த இயற்கை நலத்தையும் கண்டு மகிழ்ந்து கொண்டே இரவு ஏழு மணிக்குத் திருவனந்தபுரம் போய்ச் சேர்ந்தோம்.

வந்த அயர்ச்சி மிகுதியில் அயர்ந்து உறங்கிய நான் காலைக் கதிரவன் உதிப்பதன் முன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு நண்பருடன் நகர் நலம் காணப் புறப்

பட்டேன். திருவாங்கூரில் ஆடகமாடத்து அறிதுயில் அமரும் பதுமநாபன் அடிகளைப் பணிந்தேன். இளங் கோவடிகள் இவ்விறைவனை இதயத்தமைத்து பாடிய பாடல்கள் என் நினைவுக்கு வந்தன. பிறகு ஆண்டுள்ள அழகார் மிருகக் காட்சிச் சாலையையும், பொருட் காட்சிச் சாலையையும், ஓவியக் காட்சிச்சாலையையும் உற்று நோக் கினேன்.

மலைவளமும், கான்வளமும் கலந்துள்ள நாட்டில் மிருகக்காட்சிச்சாலையின் சிறப்பை விளம்பவும் வேண்டுமோ! சென்னைக்காட்சியில் காணாத சில புதிய மிருகங்க ளெல்லாம் ஆண்டுக் காணப்பட்டன. ஓவியக்காட்சி உள்ள முருக்குவதாகும். பொருட்காட்சிச் சாலையில் விதம் விதமான பொருள்கள் வைக்கப்பட்டிருந்ததலைக் கண்டோம்.

இக்காட்சி யெல்லாம் கண்ட நாங்கள் ஒருவரால். நகரத்திற்கு நீரளிப்பு நிலையத்திற்குக் கொண்டு செல்லப் பட்டோம். ஆண்டமைந்துள்ள சுகாதார வசதியைக் கண்டு கழி பேருவகை யெய்தினோம் தனியரசாட்சியின் கீழ் தங்கிய நலத்தை எண்ணினோம். கண்ணாம்பினாலும் படி காரத்தாலும் தண்ணீரைத் தூய்மையாக்கும் முறையைக் கண்டு போற்றினோம். "நாடென்ப நாடா வளத்த" என்ற வள்ளுவர் வாய்மொழி எங்கள் நினைவிற்கு வந்தது. தனி அரசாட்சியின் கீழ் அமைந்த திருவாங்கூர்ச் சீமையின் செம்மைசால் வளமெல்லாம் காண்பார்க்கும் கேட்பார்க்கும் உள்ளத்துள் உவகை ஊட்டுவதாகும்.

ஆண்டுள்ள காவற்காரர்கள் (Police) இளஞ்சிறுவர் சொல்லுக்கும் செவி சாய்த்து நின்றதை நேரில் கண்டோம். துட்டரை அடக்கியதையும் கண்டோம். அரசன் ஆணை யெண்ணி வியந்தோம். இவ்வாறு திருவனந்தபுரத்தின் பல்வேறு வளமெல்லாம் கண்ட பிறகு கன்னியா குமரியை நண்ணப் புறப்பட்டோம். திருவனந்தபுரத்திலிருந்து 'பஸ்ஸில்' புறப்பட்ட நாங்கள் வழி யிடையே இயற்கை அழகைத் தான் கண்டு

வந்தோம். அவ்வண்டியைச் செலுத்துபவரும (Driver) உடனிருப்பவரும் (Conductor) வண்டியை நிறுத்துவதற்கும் செலுத்துவதற்கும் தனித்தமிழ்ச் சொற்களே உபயோகித்தமை வியக்கற் பாற்று. 'நிறுத்து' என்றும், 'போகலாம்' என்றும் அவர்கள் கூறும்போது நாங்கள் மகிழ் வடைந்தோம்.

யாம் கண்ட நிகழ்ச்சியில் மற்றொன்றும் குறிக்கற் பாலது. அந்நாட்டு மக்கள் பயனில்சொல் பாராட்டாது நிற்கும் நிலை ஏற்புடைத்தாகும்.

உணவினைக் குறிக்கும் 'ஊண்' என்னும் சொல்லும், மேற்கினைக்குறிக்கும் 'படிஞாயிறு' என்ற சொல்லும், மொழியின் பெயராகிய 'மலையாளம்' என்னும் சொல்லும், இன்னும் இதுபோன்ற பலவும் தனித்தமிழ்ச் சொற்களாகவே இருப்பன கண்டு இறும்பூதெய்தினோம்.

தமிழ்நாட்டு மக்கள் உண்ணும் உணவினை ஊண் என்று கூறுவது கண்கூடு. 'ஊண் வளர்க்க ஊண் உண்ணல்' என்பதும் ஓர் பழமொழி. மேற்கு என்னும் சொல்லும் அவ்வாறே அங்கு மலையாளம் வழங்கும் நாட்டிலும் பயிலப்படுகிறது. கிழக்கு மேற்கு என்பன தமிழ் நாட்டு இயற்கை முறைக்கு ஏற்ப வழங்கும் பெயர்களாகும். தமிழ் நாடு கிழக்கே வரவரத் தாழ்ந்தும், மேற்கே போகப் போக உயர்ந்தும் இருப்பது கண்கூடு. கீழ் இறங்குவதால் கிழக்கு என்றும், மேல் உயருவதால் மேற்கு என்றும் அறிஞர் பெயரமைத்தனர். இப்பெயரே அங்கும் வழங்கப் படுகிறது. ஆனால் இயற்கை வேறுபடுகிறது. கிழக்கே வரவர உயர்ந்தும், மேற்கே போகப் போகத் தாழ்ந்தும் நிலப்பரப்பிருப்பினும், கிழக்கு மேற்கு என்ற தமிழ்ப் பெயராலேயே திசைகளை வழங்கி வரும் செயல் அந்நாடு பண்டைத்தமிழ் பரவிய நாடென்பதை இன்றும் விளக்கிக் கொண்டிருக்கின்றது. நிற்க, மேற்கினைக்குறிக்க எழுந்த 'படி ஞாயிறு' என்ற சொல்

னும் தமிழ்ச் சொல்லேயாகும். ஞாயிறு படியும் திசையை (மறையும் திசை) படி ஞாயிறு என்று சொல்லுதல் முறை யன்றோ?

மற்றும் மலையாளம் என்பது நாட்டினையும், மொழியினையும் குறிக்க எழுந்த பெயராகும். மலை என்பது தூய தமிழ்ச்சொல்லே. மலையில் ஆளுகையுடைய மொழி மலையாள மொழியாகும்.

இத்தகைய பெயர்களைப்பற்றி எண்ணியபோது அந்நாட்டறிஞர் சுந்தரம்பிள்ளை அவர்கள் கூறிய பாடல் என் சிந்தையில் வந்தது.

'பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கி
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே.'

என்று தம் மனோன்மணியத்தில் கூறியது போன்று தமிழிடைத் தோன்றிய மலையாளமொழியிலும் இன்று பெரும்பாலும் வடமொழி பற்றிநிற்பதுகண்டு சிறிது சிந்தித்தோம்.

இவ்வாறு திருவாங்கூர் இயற்கையையும் செயற்கையையும் எண்ணி எண்ணி நாங்கள் குமரிக் கரையை அடைந்தோம். குமரியின் நினைவுடன் நாஞ்சி நாடு தாண்டித் தென் பாண்டி நாடு வந்து சேர்ந்தோம்.

திருவாங்கூர்ச் சீமையைக் கண்டு செல்லுங்கால் எம் உளத்தில்தோன்றிய எண்ணங்கள் இன்னும்பல. இயற்கை வளமும் செயற்கை வளமும் ஒருங்கிருப்பதோடு, தனி நாடாய் இத்திருவாங்கூர் நிற்பதற்கு, அன்றுகண்ணகியாம் கற்புத் தெய்வம், அறிஞர் விரும்பும் அறிவுடைத் தெய்வம் அருளிய 'வென் வேலான் குன்றில் விளையாட் டகலேன்

'யான்' என்ற வாய்மொழியே காரணமாகும் என்றும், அவ்வன்னையே! இன்று மலையாள பகவதியாக மன்னி அருள் புரிகின்றாள் என்றும், அவள் வாக்கு என்றும் பொய்க்காது என்றும், சேரநாட்டுச்சிறப்பினை அவள் காத்து உடனிருப்பாள் என்றும் அறிஞர் இயம்பும் பலபல உணர்ச்சிகள் உள்ளத்தெழுந்தன. உணர்ச்சி அலைகளை அடக்கி இறைவனிடம் மனமிருத்தி எந்நாடும் இந்நாட்டைப்போல் நன்னாடாக, தனி அரசின் நாடாக, அன்பு நாடாக, ஆற்றல் சால் நாடாக விளங்க வேண்டுமென அவனடி பரவிப் பணிந்தேன்.

# குமரியின் நினைவுகள்

குமரி என்னும்போதே தண்டமிழ் நாட்டுத் தென் கோடி முனை உள்ளத்தே தோன்ற நிற்கும். 'வடவேங்கடம் தென் குமரி' என்று தமிழ் நாட்டெல்லையைப் பண்டைப் பெரியோர் வரையறுத்தனர். குமரி என்பது பண்டை நாளில் எதைக் குறித்தது என நாம் திட்டமாக அறியாது போயினும் இன்று குமரி முனை நம் எதிர் நிற்கின்றது. அக்கரையிடத்துத் தென் கோடியில் சென்று சேர்ந்த உடனே உள்ளத்தே பல் வேறு எண்ணங்கள் பற்றுவது இயல்பு. எனவே குமரியின் நினைவுகள் என்பது தண்டமிழ் நாட்டுத் தனிப் பெருங் கோடியில் உள்ள கன்னியா குமரியின் கடற்கரையில் தோன்றிய நினைவுகளேயாம்.

இந்தியத் தீபகற்பத்திற்குத் தெற்கே தமிழகத்திற்குத் தலைசான்ற தென் எல்லையாக உள்ளது குமரி முனையாகும். 'குமரியொடு வடவிமயத்தொரு மொழி வைத்துலகாண்ட' என்றது இளங்கோவடிகளது சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லார் உரைத்தொடக்கமாகும். இக்குமரி முனையே அன்றும் இன்றும் தமிழ் நாட்டுத் தென் எல்லையாகச் சிறந்துள்ளது என அறிகிறோம். கிழக்கிலேயே வங்காள விரிகுடாவும், மேற்கில் அராபிக்கடலும், தெற்கில் இந்து மகா சமுத்திரமும் ஒன்றி இணையும் காட்சி எண்ணரும் காட்சியாக இலங்கி நிற்கும்.

நானும் என் உடன் வந்த ஒருவரும் திருவனந்தபுரத்துச் சிறப்பையெல்லாங்கண்டு குமரி முனை குறித்துப் புறப் பட்டோம். நாகர் கோயில் வழியாகக் குமரிக்கரைக்கு மாலை 4-மணிக்கு வந்து சேர்ந்தோம். 'பசுங்குமிட மெங் கும் பரமன் காண் அம்மாலை' என்ற தாயுமானவர் வாக்கு ஆண்டு எங்கள் உள்ளத்தில் தோன்றிற்று. நீலநிறக்கடல் எவ்விடத்தும் இலங்கியது. இயற்கைத் தேவன் இன்

கொலுவீற்றிருந்தான். குமரித் தெய்வம் கோயில் கொண்டிருந்தாள். கன்னியென்னும் பேரரசி கடற்கரையில் கன்னியாகவே காட்சியளித்துக் கவினுற விளங்கினாள். பொற்பார் கோயில் பொலிவுற விருந்தது.

இருவரும் கடற்கரை அண்மினோம். அலையொலியும் அழகியலும் எங்கள் காதையும் கருத்தையுங் கவர்ந்தன. எத்திசை நோக்கினும் தித்திக்கும் கடற்காட்சி! எம்மருங்கு நோக்கினும் விம்மிதமாம் பொன்மாட்சி! மேலைக்கடலில் சூரியனது ஒளிபட அக்கடல் முழுதும் வெள்ளித்தகடாய் விளங்கிற்று. சிறிது நேரம் இக்காட்சியைக் கண்ட எங்கள் உள்ளம் நீராட நினைந்தது. நீராடினோம்.

'யாமார்க்கும் குடியல்லோம் யாதுமஞ்சோம்
மேன்மேலும் குடைந்தாடி ஆடுவோமே'

என்ற திருவாசகத்தை என்நா இசைத்தது. இசைந்த இருவரும் நீராடினோம். ஆடவரும் பெண்டிரும் அருகே கடல்நீரில் களிக்க ஆடினர்.

நிற்க, குமரிக்கரையில் தெற்கு நோக்கிச் சிறிதுநேரம் அமர்ந்தோம். அம்மம்ம! என் சிந்தனையில் தோன்றிய எண்ணங்கள் கணக்கில. 'இந்துமகா சமுத்திரமே! எங்கள் தமிழ் நாட்டை-பழம்பெரும் நாட்டை யாண்டொளித்தாய்?' என்ற சொற்கள் எழுந்தன. ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன் விளங்கிய நாற்பத்தொன்பது தமிழ் நாடுகளை ஏன் கொள்ளை கொண்டாய் என்ற கேள்வி எழுந்தது. பல துளிப் பெருக்குடன் பண்புடனமைந்த பஃறுளியென்னும் பழைய ஆறு எங்கே? குமரிஎன்னும் பொன்கொழித்த ஆறு எங்கே? ஈடெடுப்பற்றிருந்த அழகார் குமரிமலை எங்கே? திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றம் எறிந்த குமரவேளும் ஒருங்கிருந்து தமிழாராய்ந்த தலைச்சங்கம் திகழ்ந்த தென்மதுரை எங்கே? தொல்காப்பியரும் அருந்தமிழகத்தியனும் இன்னும் பலரும் இடைச் சங்கம் மன்னி இருந்து தமிழ்ஓம்பிய கபாடபுரம் எங்கே? ஏழ்தெங்க

நாடெங்கே? ஏழ்முன்பாலை நாடெங்கே? ஏழ்பின் பாலை நாடெங்கே? ஏழ்குன்ற நாடு எங்கே?

கிழக்கே ஆஸ்திரேலியா முதல் மேற்கே மடகாஸ்கார் தீவு வரையில் பரவி இருந்த லெமூரியா கண்டம் எங்கே? எம்மிடமிருந்து எடுத்த இயற்றமிழ் எங்கே? இசைத் தமிழ் எங்கே? நடத்தமிழ் எங்கே? வீரம் எங்கே? ஈரம் எங்கே? சாரம் எங்கே? தீரம் எங்கே? மணம் எங்கே? பணம் எங்கே? கணம் எங்கே? இனம் எங்கே? அருள் எங்கே? தெருள் எங்கே? பொருள் எங்கே? ஓலைச்சுருள் எங்கே? பொன் எங்கே? மண் எங்கே? கண் போன்ற கன்னித் தமிழெங்கே? எண்ணரிய இலக்கிய மெங்கே? ஆ! இந்து மகாசமுத்திரமே! எங்கே? இவை எங்கே? இவை எங்கே? எங்கே? எங்கே? என்று இதயம் எண்ணுவதெல்லாம் எண்ணிற்று.

'அடியிற் றன்னள வரசற் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கை இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி!'

என்ற இளங் கோவடிகள் வாக்கு எம்மனத் திடை எழலாயிற்று. வடி வேலெறிந்த வான் பகை பொறுக்காரணமோ எம் நாட்டைக் கொண்டது என எண்ணினேன். ஏழு கடலையும் வற்றச் செய்த எம்தலைவன் உன்னைத் தடுக்காது விட்டானோ எனத் தளர்ந்தேன்.

"தமிழைக் கொண்ட நீயாவது தமிழ்மணம் வீசலாகாதா? ஏ பேதாய்! கருங் கடலே! உறங்காத அலை உனக்கு உண்டாய காரணம் என்ன? ஓயாது வயிறலைக்கும் உன் கொடுமை என்ன? வாய்ச்சலியாது கூச்சலிடும் வயிற்றெரிச்சல் என்ன? இவற்றிற்கெல்லாம் காரணம் உண்டு. எம் கலையை—வீரத்தை—நாகரீகத்தை—நலத்தை—பிறவற்றைக் கொள்ளை கொண்டாய். அது கண்டு அலறிய

தமிழர் எத்துணையர்? மனமடித்தார் எத்தனை பேர்? ஆயிர மாயிர மாண்டுகளாக உள்ள தமிழர் இட்டசாபம் வீண் போகுமா? அச்சாபமெல்லாம் திரண்டு ஓயா அலையாக ஓயா ஒலியாக-சாயாத் துயராக-சலியாச்சலிப்பாக உன்னை அடைந்தது" எனக் கடல் நோக்கிக் கதறினேன். இன்று எம் பழந்தமிழ் நாடும், பழந்தமிழ்க் கலையும் இருப்பின் குமரியோடு வடவிமயத் தொரு மொழிவைத்து உலகாண் டிருப்போமே! எம் நிலை இன்று மற்றவர் கண்டு நகைக் கத்தக்கதாக இருக்கின்றதே! இது உன் செயலல்லவா? அந்நிய நாட்டார் அஞ்சி ஒதுங்கி அரண் பெற்று நின்ற பெற்றிமை உன்னாலன்றோ ஒழிந்தது? உன் செயலின்றேல் இன்று நாங்கள் உலகை ஆள்வோமே! தமிழ் நாட்டிடை—தமிழ்மொழியிடை—தமிழ் மக்களிடை நீ கொண்ட கோபந் தான் என்னையோ? இத் தமிழைக் கொள்ள உன் தாபந் தான் என்னையோ? என்றெல்லாம் எண்ணி எண்ணிச் சிந்தை உருக வாய் விட்டரற்றினேன்.

கன்னிக் கரையில் குமரியின் கோயில் காட்சி அளித் தது. கீழ்முகத் தெய்வமாகக் குமரி அன்னை கருங் கடலைக் கையமர்த்தி யுள்ளாள்.

'நீலத் திரைக் கடலோரத்திலே நின்று நித்தம் தவம் செய் குமரி எல்லை'

என்ற பாரதியார் அடிகள் உள்ளத்தமைந்தன. குமரித் தெய்வம் தவநிலை கொண்டு கடலைக் கை யமர்த்தி நின்றாள். அத்தெய்வநிலை தாண்டிக் கடல் வராது எனத் திடங்கொண் டேன். ஒருபுறம் கோயிற் காட்சியும், முப்புறம் கடற் காட்சியும் என் உள்ளத்தையும், உணர்ச்சியையும் கவர்ந் தன. அதற்குள் மாலை நேரம் நெருங்கிற்று. வெள்ளித் தகடு போலிருந்த மேலைக்கடல் பொற்றகடெனப் பொலிய லாயிற்று. இறைவன் காட்சி எதிர் நின்றது. சிந்தையும், கண்ணும், வாக்கும், வணக்கமும், ஐம்புலன்களும் ஒன்றி எல்லாம் அவ்வியற்கை இறைவன் காட்சியில் இயைந்தன.

'சிந்தனை நின்றனக் காக்கி நாயி னேன்றன்
கண்ணிணை நின் திருப்பாதப் போதுக்காக்கி

வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கிவாக்குன்
மணிவார்த்தைக் காக்கி ஐம்புலன்களார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனை செந்தாமரைக் காடனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித் தனியனேற்கே'

என்ற மணிவாசகர் பாடல் என் சிந்தைத் தொட்டிற்று. இந்நிலையில் நான் அங்கு இருந்தேன் என்றால் இது சிறிதும் மாறுபாடன்று. சிந்தனை இறைவனது இயற்கை உருவில் சென்றது. கண்கள் அவன் இயற்கைக் காட்சியைக் கண்டன. அவ்வியற்கை இறைவனுக்கு வந்தனை செலுத்தினேன். வாய் அவ்வியற்கையைப் போற்றிற்று. ஐம்புலன்களும் இயற்கைவழி அமைந்தன. கருங்கடல் மாலமுதப் பெருங்கடலாய் மன்னிற்று. எதிரில் சிறுகுன்றம் திகழ்ந்தது. இக்கடற் காட்சி இயற்கை இறைவன்தன் உயர் நிலையை எனக்களித்தது. செந்தாமரைக் காட்டினை ஒத்து மாலை வெய்யிலில் விளங்கிற்று. இரண்டு மற்ற நிலையில்—இயற்கையில்—இன்ப அன்பில்—அளப்பருங் கருணை வளப் பெரும் நிலையில் யான் ஒன்றி நின்றேன். செந்தமிழ் நாட்டுத் தென் கோடியில் தன்னை மறந்த தனிநிலை பெற்றுத் 'தன்னை மறந்தலயம் தன்னிலிருந்தேன்' என்ற பாரதியாரடி நினைந்தேன். என்னை மறந்தேன்! என் உற்றார் உறவினர் மற்றோர் பெற்றோர் யாவரையும் மறந்தேன்! யானெனதென்னும் செருக்ககன்றேன். பிறவாயாக்கைப் பெரியோனாகிய இயற்கை இறைவனே யாண்டும் காட்சி அளித்தான்; கண்டறியாதன கண்டேன். எங்கும் இயற்கை இலங்கிற்று. உளமும், சொல்லும், செயலும் அவ்வியற்கையில் இரண்டறக் கலந்தன. இயற்கை! இயற்கை! இயற்கை! என்றே என் நா ஒலித்தது. ஆண்டுள்ள செம்மணலையும், வெண்மணலையும், கருங்கடலையும் மாறிமாறி நோக்கினேன், அம்மணல்களைப் பற்றி அங்குளார் ஓர் கதை கூறினர். அக்கதை ஒருபுறம் எனக்கு வியப்பை அளித்தது. அண்ணாந்து நோக்கினேன்; நீலவானம். அகன்று நோக்கினேன்; நீலக்கடல். மேலைக்கட

லுள் கதிரவன் தன் கிரணங்களை அடக்கிக்கொண்டு உள்புகு கின்றான். கீழ்முகத்தெய்வமாக—அன்னைக்குமரி—கன்னி— கடல் நிலையைக் கட்டறுத்து நிற்கிறாள். ஆம்! அன்று நான் பெற்ற நிலை யார் பெற்றார் வையகத்துள்? நான் தான் வேறு என்று பெற்றேன்? இயற்கை! இயற்கை!! இயற்கை !!! யாண்டும் இயற்கை! தெய்வத் தமிழ்முனையென் உள்ளத்தில் தித்தித்தது. தேனூறு தமிழ்க்கிளவிகளை வாய் மடுத்த கடல் காட்சி அளித்தது. ஒருபுறம் தமிழ்க்கலைகளை— தமிழ்நாட்டை உட்கொண்ட நிலை நினைத்து வருந்தினேன். மறுபுறம் ஒப்பற்ற இயற்கைக் காட்சியின் பெருநிலையில் திளைத்தேன். தமிழ் அன்னையின் பாத மலரில் நின்று கடல் தழுவும் நிலைகண்டு, கதிரவன் கிரணங்களை ஒடுக்கி மறையும் இவ்வேளையில் கன்னிக்குமரியில் கீழ்முகத் தெய்வத்தையும் செம்மைசால் கடலையும் உளம் கொண்டு ஒன்றிய உளத்தின னாய் இன்பம்! இன்பம்! இன்பம்! இயற்கை! இயற்கை! இயற்கை! எழில்! எழில்! எழில்!என்று கூறி என் இடம் விட்டு எழுந்தேன். சூரியனும் மேற்கடலுள் மறைந்தான். கருங்கடலும் கருவானமும் கலந்தன; உள்ளம் மகிழ்ந்தது; உலகமும் அவ்வின்பம் பெறுக என வாழ்த்துகின்றேன்.

# "அஞ்சுவ தியாதொன்றும் இல்லை"

'அஞ்சுவது யாதொன்றும் இல்லை' என்பது அப்பர் அருள் வாக்கு! இப் பெருவாக்கு எப்பொழுது புலர்ந்தது. சமணசமயம் விட்டுச் சைவசமயம் சார்ந்ததை அறிந்த பல்லவன் பாரறியத் தீங்கிழைத்த காலத்தே பிறந்தது. மதயானை! மலையெனப் பருத்தது! மக்களைக் கொல்லும் திறத்தது! கண்டார் மலையும் பேருருவத்துடன் ஆளுடைய அரசினை அழிக்கவருகின்றது! இறையடியல்லால் எதையும் எண்ணாத நாவரசர் நல்லுளத்து இன்பம் அன்றித் துன்பம் உண்டாகவில்லை. முகத்தேகாணும் கண்கள் கரிய பெரிய மால்யானையை நோக்குகின்றன. அகத்தே பொலியும் அன்புக்கண்கள் ஆண்டவனது தாண்டவ பாதங்களைக் காண்கின்றன. உளத்தே முறுவல்! முகத்தே புன்சிரிப்பு. ஆண்டவனது பாதங்கள் மதம்பொருந்திவரும் மால் யானையின் வன்மையைக் கெடுக்கும் வளம் வாய்ந்தன என்று அவருக்கு உள்ளம் உணர்த்திற்று. உள்ளத்தில் உண்மை ஒளி பிறந்தது. பிறந்த ஒளி பெருக்கெடுத்து வாயிடை வழிந்தது. பதிகமெனத் திகழ்ந்தது.

> சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கட் சூளா மணியும்
> வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
> அண்ணல் அரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
> திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
> **அஞ்சுவ தியா தொன்று மில்லை** அஞ்ச வருவதும் இல்லை

என்ற அஞ்சாத சொற்களே அப்பதிகத்தின் முதற்பாசுரம்.

இன்று உலகம் பற்பலவாய வகைகளில் முன்னேறிக் கொண்டு வருகிறது. பாரெங்கும் போர் முழக்கம் பறை சாற்றுகின்றது. நாளொன்றுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் தம் அரிய உயிரை இழக்கின்றனர். அஞ்சும் நிலை மக்கள் உள்ளத்தே அதிகமாகி விட்டது. அஞ்சாப் பொரு

ளுக்கெல்லாம் மக்கள் அஞ்சுகின்றனர். நம் நாட்டிலேயும் இன்று போர் நடக்கிறது. மக்களெல்லாம் மனம் வாடுகின்றனர். மேலை நாடுகளெல்லாம் போர்த் தன்மையை நன்கு அனுபவித்து விட்டன. ஆகவே உலகமே இன்று அஞ்சிக்கிடக்கிறது என்றே சொல்லவேண்டும்! எதற்கு? வஞ்சகத்திற்கு! கொடுமைக்கு! பாராசைக்கு! பேராசைக்கு! வன்கண் இழைக்கும் வல்லார் அஞ்சுவதற்கஞ்சாது அல்லல் இழைக்கின்றனர். அவர்கள் தம் அவதியே இன்று உலகை அல்லல் வழி ஆட்டுகிறது. அவர் தம் அல்லல் நீங்கி அவனி நலமுறுக! 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று ஒவ்வொருவரும் நலம் சிறந்து விளங்குவார்களாக!

நாவரசர் நிலவரசர் பால் அமைச்சராக இருந்தவர். பல்லவ மன்னன் பக்கத்திலிருந்து ஒல்லும் வகையெல்லாம் உறுதுணையானவர். சைவ சமயத்தே பிறந்தும், நம் பரருளாமையினால் பிற சமயம் புகுந்தார்! அவர் தம் அரும் சமயத்து அருங்கலை பயின்றார். அமைச்சரானார். இறைவன் அருள் கூடிற்று. தமக்கையார் அன்பும் தலைநின்றது. சைவம் வருக என்றழைத்தது. சூலை நோயின் காரணமாகச் சைவ சமயம் சார்ந்தார்.

மதமாற்றம் அறிந்த மன்னன் மற்றவர் சொற்கேட்டு நாமன்னருக்குப் பல தீங்கிழைக்க நினைத்தான். வருக என்று ஆணை தந்தான். காவலரும் அமைச்சரும் நாவரசரை அழைப்பாராயினர். அடிமைத் தளையை அறுத்தெறிந்து ஆண்டவன் பால் மீண்டிலா அன்புவைத்த அப்பர் பெருமான் அஞ்சிலர். தம் தனிப்பெருந் தலைவன் ஒப்பற்ற உமையொருபாகனே என உணர்த்தினர். அமைச்சர் மேலும் வற்புறுத்தினர். 'நீங்கள் வரவேண்டும் அரசன் ஆணை; பல்லவ மன்னன் பணி' என்றனர். தம் மரசன் என்று மாற்றாரொருவன் பெயரைக் கூறுவதை அறிந்தார் அப்பர். உள்ளத்தே அஞ்சாமை தோன்றிற்று.

'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்

ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே யெந்நாளும் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே!

என்று பதிலிறுத்தார்.

வீரமொழி விளம்பிய வேந்தர் ஈர உளம் உடையவரானார். தம்மை அழைத்துச் செல்லாவிடின் வந்தவர்களை வேந்தன் ஒறுப்பான் என எண்ணினார். 'ஈண்டு வரும் வினைகளுக்கு எம்பிரான் உளன்' என எண்ணினார். உடன் சென்றார், ஆண்டவன் அருள் நிலையை உலகெலாம் உணர!

துறவிகள் மொழிக்குட்பட்ட வேந்தன் சொல் வேந்தரைத் துன்புறுத்த நினைத்தான்; துன்புறுத்தினான். 'ஈசனடியார்க்கு ஈண்டு வருந்துயருளவோ?' என்று கூறினார் நாவுக்கரசர். உண்மைதான்! அவருக்கு வந்த துன்பங்கள் எல்லாம் அவரைத் தீண்டா தகன்றன. நீற்றறையிலிட்டு நீக்க நினைத்தனர். ஈசன் எந்தை இணையடி நீழலை நினைந்து நீற்றறையை மலர் நிறைந்த, தண்ணீர் மிகுந்த பொய்கையாக மதித்தார். வெப்பமின்றி இறையருள் நிழலில் இன்புற்றிருந்தார்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

என்றது அவருடைய நா.

நஞ்சூட்டி நசுக்க நினைத்தனர் சமண சமயத்தார். நஞ்சினை அமுதாகக்கொண்ட நம்பனடியவராம் நம் நாவரசர் நஞ்சினுக்கு அஞ்சக் காரணமில்லை. அஞ்சாது நஞ்சை உண்டார்; உய்ந்தார்; நஞ்சுண்டு அமைந்தார். இதைத் தெய்வச் சேக்கிழார்,

பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர்நீக்க முன்னைவிடம் அமுதானால்
படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ.

என்ற அழகிய மொழிகளால் வளம் படுத்தியுள்ளார்!

நீற்றறையை மாற்றறையாக்கியும், நஞ்சினை விஞ்சிய அமுதமாக்கியும் ஆண்டவன் அருள் பெற்றுநின்ற அடிகளாரை மேலும் இன்னலுக்குட் படுத்தினான் பல்லவ மன்னன். மதம் பிடித்த யானையை ஏவிக் கொல்லப் பணித்தான். ஆண்டவன் அருள் நினைந்த அடியார் பால் கொடிய வேழமும் தலைகுனிந்து சென்றது. அனுப்பியவனையே அழிக்க முற்பட்டது. யானையின் வருகைகண்ட காலத்திலேதான் அடிகளார் உள்ளத்தே ஆனைக்கு மாற்றெழுந்தது; 'அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்ச வருவது மில்லை' என்று வாய் விட்டுப் பாடினார், வீர உணர்ச்சியோடு. ஆண்டவன் அருகிருக்கிறான் என்ற ஆர்வத்தோடு எதிர்த்த சூரப் பாடு என்னே!

தாம் செய்த செயல் ஒன்றும் சிறக்காதது கண்ட சமணர் நாவரசரைக் கல்லொடு பிணித்துக் கடலிடையிட்டனர். அன்றும் அடிகளார் மனங்கலங்கினார் இல்லை. ஆண்டவன் பாதங்களையன்றி வேறு பற்றவும் இல்லை. 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணையாவது நமச்சிவாயவே' எனவாயாரப் புகழ்ந்தார். ஆம்! நமச்சிவாயமே நற்றுணை யாயிற்று. கடலில் ஆழ்ந்தும் கல் தெப்பமாயிற்று. அக்கல்லைத் தெப்பமாகக் கொண்டு ஆண்டவன் அடியினை நினைந்து கரை ஏறினார். பாதிரிப்புலியூரின் பக்கம் பார்த்த கரையிலிடம் சேர்ந்தார். எதிரே ஆண்டவன் திருக்கோயிலைக் கண்டார். இறைவன் அம்மையப்பராகக் காட்சி அளித்தார். கரை புரண்ட இன்பவெள்ளத்தே ஆழ்ந்தார் நாவரசர்.

'ஈன்றாளு மாய்எனக் கெந்தையு மாய்உடன் தோன்றினராய்
மூன்றாய் உலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க

என்றான் இமையவர்க் கன்பன் திருப்பாதிரிப் புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே'

என்று அம்மை அப்பரது அருட்டிறனைப் போற்றிற்று, அவர் வாய்.

துன்பமெல்லாம் நீங்கிற்று. வெற்றிக் குன்றின்மேல் வீறு பெறத் தோன்றினார் நம் நாவரசர். அவர்தம் அன்புத் திருநீற்றொளி தமிழ்நாடு முழுதும் பரவிற்று. பல்வகை இன்னலில் ஆழ்த்திவருத்திய பல்லவமன்னனும் நாவரசின் பாதத்தே பணிந்தான். பல்லவன் இழைத்த கொடுமைகளையெல்லாம் ஆண்டவன் அருட்சுடர் வாள் கொண்டு வென்ற வாகீசருக்கு அஞ்சாமை தோன்றிற்று. ஆண்டவன் அருள் இருப்பின் எத்துயரும் சேராது என்று அறிந்தார். தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என எண்ணினார். எண்ணம் இன்பப் பாட்டாக, நெஞ்சறி வுறுத்தலாக வெளிவந்தது.

மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே!
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே

என்றதே அப்பாட்டு. இதே கருத்தை மற்றோரிடத்து,

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்
டூனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே

என்று செப்பிப்போந்தார். இப்பாடல்களைச் சிந்திப்பார்க்குச் சிந்தை செம்மைப்படும் என்பது திண்ணம். சிறு தொழில் கண்டு பெரும்பயம் கொண்டு அஞ்சி ஒடுங்கும் கல்லாமக்களுக்கு நல்லறிவு கொளுத்துவனவாக அமைந்தன அவை. விண்வழிச்செல்லும் வெய்யோன்முதலியோர் மாறுபடினும் படுக, நிலம் நீருள் மூழ்கினும் மூழ்க, உலகநிலையெல்லாம் நிலைகெடினும் கெடுக, நான் அஞ்

சேன் என்று கூறுகின்றார் நாவரசர். காரணம் என்ன? அவர் தமக்கென ஒரு தக்க சார்பிடத்தைப் பெற்றார். தக்க சார்பிடம் உடையவர்கள் மற்றவர்தம் பிடிப்பில் தனக்கு அஞ்சாரன்றோ? அதுபோல நம் நாவரசரும் ஒன்றான இறைவனது அடியினைப் பற்றியிருப்பதால் எதற்கும் அஞ்சவேண்டாமென அறிவுறுத்தினர்.

இந்த அஞ்சாமைக் கொள்கை எப்பகுதிக்கும் ஏற்புடைத்தாகும். இறைவன் அருள் பெற்றவர் உலகில் எதற்கும் அஞ்சாதிருக்கலாம் என்பது உண்மை. ஆதலால் வள்ளுவர் 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை, அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்' எனக் கூறியுள்ளாரே! ஆம்! அஞ்சத்தக்கதற்கு அஞ்ச வேண்டியதுதான். இறைவனுக்கு அஞ்சல் இயற்கை. மாயப் பொருள்களின் தீயகொடுமைகளுக்கெல்லாம் அஞ்சலாகாது! இடுக்கண் வருங்கால் நகுக என்றதேயன்றி அஞ்ச வேண்டுமென்று சொன்னதில்லை. ஆதலின் இச்சாதாரணப் பொருள்களுக்கெல்லாம் நாம் அஞ்சவேண்டிய அவசியம் சிறிதும் இல்லை. இது அப்பர் மாத்திரம் கண்ட உண்மையன்று. அடியவர் அனைவருங் கண்ட உண்மை.

மணிவாசகப் பெருமான் இறை வழிபாட்டில் ஈடுபட்டு அரசன்றன் அரும்பொருளெல்லாம் ஆலயப்பணியில் செலவிட்டார். உற்றது தெரிந்த கொற்றவன் மணிவாசகர்மேல் சீற்றமுற்றான்; ஆட்களை அனுப்பினான். மணிவாசகர் இறைவனிடம் முறையிட்டார். 'நாம் ஆவணி மூலத்தன்று வருவோம், அஞ்சற்க!' என்று ஆண்டவன் அருளினான். உடனே மதுரை சேர்ந்தார். ஆவணி மூலமும் வந்தது. குதிரைகளும் வந்தன. கொற்றவனும் மகிழ்ந்தான். ஆனால் அம்மகிழ்ச்சி ஒரு நாள் அளவினதே. பரியென வந்த நரியெல்லாம் காடடைந்தன. மணிவாசகரும் சிறையடைந்தார்; அல்லலுற்றார். ஆனால் அவரது வீர உள்ளத்தே அரசனுக்குப் பணியும் பான்மை தோன்றிற்றில்லை. ஆண்டவனை நினைந்தார்.

'அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் எனை ஆட் கொண்ட போதே கொண்டிலையோ?
இன்றோர் இடையூ றெனக் குண்டோ? எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே?

என்று பாடினார். இறைவன் தானேவந்தவரைத் தலையளித்தாட் கொண்ட காரணத்தால் தாம் யாருக்கும் அடிமையல்ல எனவும் எடுத்தியம்பினார்.

"தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கும் மற்றை
மூவர் கோனாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும் வந்தாண்டு கொண்டான்
யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியாரோடு
மேன் மேலும் குடைந்தாடி ஆடுவோமே"

என்பன அவரது வீர மொழிகள்.

கிறித்துவ நெறியை உலகிடை ஓம்பியவர் இயேசுபெருமான். அருள் நிலை கண்டு அன்பின் ஆற்றலை உலகிடை விளக்கியவர் இயேசு பெருமான். அவர் அடைந்த இன்னல்கள் பல. அவர் வீர உள்ளம் அலைத்தையும் 'வருக' என்று வரவேற்றது. சிலுவையில் தேற்றி ஆணி அறைந்த ஞான்று இறைவனை நோக்கிப் போற்றினரே யன்றி அஞ்சி அழவில்லை.

''போராசன் பிலாத்துடனே சேர்ந்த பல்லோர,
பிழைபடவே பிடித்துன்னைப் பெரிதும் மாழ்கி
பாரிடத்துக் கொலைசெய்ய நின்றார் அந்நாள்
பராபரனே பாரமெனப் பார்த்து நின்றாய்
யாரிடத்தும் சினங் கொள்ளாய் சிலுவைஏறி
அந்நிலையில் அன்பெனுநற் குன்ற மேறி
காரிடத்தும் ஒளியிடத்தும் கலங்கா தீண்டு
கர்த்தர்வழி காட்டிநின்ற இயேசு வாழி!'

என்பன அவரது வீரச் செயல் பற்றி எழுந்த மொழிகள்.

முகம்மது நபிநாயகமும் நல்லார் வாழ வழி வகுத்த பெரியார். அவரையும் அநேக இன்னல்கள் எய்தின. அவற்றை யெல்லாம் 'யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்,' என எதிர்த்து நின்று வெற்றி பெற்றுத் தமது அன்பு மார்க்கத்தை உலகிடை நிறுவினார்.

மேற்கண்ட பெரியார்களது வாழ்க்கைக் குறிப்புக்களிலே நாம் அறிவன யாவை? நல்லார்க்கு இடுக்கண் வருவது இயற்கை என்பதும், நினைந்துருகும் அடியாரை இறைவன் கையவைத்தே அருள் செய்வான் என்பதும், இடரினும் தளரினும் எத்தகைய கொடுந்துயர் உறினும் அவர்கள் இளைக்காது இறைவன் மேல் தம் அன்பினைச் செலுத்தி அமர்ந்திருந்தனர் என்பதும், அவர்களது அன்பு வழியும் அருள் நெறியும் உலகிடைப் பரவ அவை ஏதுவாயின என்பதும், அவை இன்றும் என்றும் நிலவுவது திண்ணம் என்பதும் நன்கு இலங்குகின்றன.

அவை யெல்லாம் அன்று நடந்தன! இன்றோ உலகநிலை கலக நிலையாக உள்ளது. 'ஆளைக்கல்லும் தெய்வம்' என்பது பழமொழி. அதுபோல எல்லோரும் தாம் தாம் பெரியவர் என்று கூத்தாடிக் களிக்கின்றனர். அற்பர்களை யெல்லாம் இந்திரனென்றும் சந்திரனென்றும் புகழ்கின்றனர். அந்தோ! புகழ்ந்து பெறுவன யாவை? இழிவும் வசவுமேயாம். அற்பத் தெய்வங்களுக்கெல்லாம் வாழ்த்தும் வணக்கமும் செலுத்தி வேண்டியதும் பெறாது வறிதே கழிந்தொழிகின்றனர். இதையே சுந்தரமூர்த்தி அடிகளார் அழகுபடக் கூறுகின்றார். 'உலகத்திலே அற்பர்களைப் புகழ்ந்து அலுத்தது போதும்; அஞ்சேல் என்று அருள் செய்யும் ஆண்டவனைப் பாடுங்கள்; இம்மையில் வேண்டிய உணவும் உடையும் தருவான்; வேண்டும் என்ற துயர் நீங்கும்; இடர்கெடும்; மேலும் அவ்விறைவனைத் துதிக்க மனம் விரும்பும்; துதிப்போம்; அப்போது மறுமை இன்பமும் மட்டற்றதாகி மலரும்!' என்று வன்றொண்டர் வற்புறுத்துகின்றார்.

தம்மையே புகழ்ந்திச்சை பேசினும் சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தரும் சோறும்கூறையும் ஏத்தலாம் இடர்கெடலுமாம்
அம்மையே சிவலோக மாள்வதற்கியாதும் ஐயுற வில்லையே !

என்பது அவர்தம் அன்பு மொழி!

இன்று உலகம் செல்வரைக் கண்டு அஞ்சுகிறது. பட்டம் பெற்றவரைக் கண்டு பதைக்கிறது. பதவி பெற்றவரைப் பற்றியோடுகிறது. உயர்வுடைய மக்களிலும் சிலர் தாம்தாம் செய்வ தின்னதெனத் தெரியாதவ ராகித் தாங்கெனவே வாழும் கயவர் பால் சென்று பொய் புகன்றும், கொடுந் தொழில் புரிந்தும் தத்தமக்குப் பேறும் பெருமையும் தேடிக் கொள்ளுகின்றனர். 'நம்பனடியவர்க்கு நல்காத் திரவியங்கள், பம்புக்காம் வம்புக்காம் பரத்தையர்க்காம், கள்ளுக்காம், கொள்ளைக்காம் காவுக்காம், கோவுக்காம், சாவுக்காம் தீக்காகுங் காண்' என்ற பெரியாரது அடிகள் என் நினைவிற்கு வருகின்றன. இந்த முறையிலே உள்ள பொருள்களைப் பட்டத்திற்கும், பதவிக்கும், கொள்ளைக்கும், கொடுமைக்கும் செலவழித்து மானமழிந்து மதி கெட்டுப் போகின்றனர். தம்மே லுள்ளார் எத்துணை உயர்ந்தவரேனும் அவர் பொருட்டுத் தம் மெய் வழியிலிருந்து சிறிதும்மா றிருக்கவேண்டும். அதுவே அஞ்சாமை! 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என வாதித்த நக்கீரர் அத்தகைய அருங் குடியில் வந்தவர். 'உச்சிமீது வானிடிந்து வீழ்ந்து விட்ட போதினும், அச்சமில்லை அச்ச மில்லை அச்ச மென்பதில்லையே' என்ற பாரதியாரின் வீர மொழிகளும் அத்தகைய கொள்கையினையே வலியுறுத்தும். அறிவுடையார் அனைத்தினுக்கும் தம்மே லுள்ளோர் கூறுவதைச் சரி யெனக் கொள்ள லாகாது. மிகுதிக் கண்மேற் சென்று இடித்து இன்னுரை கூறவேண்டும். அதனால் உயிர் ஏகினும் கேடில்லை. ஆனால் வசைக்கும் வாழ்வுக்கும் அஞ்சி, மேல் உள்ளவர் கூறிய தீச் சொற்களுக்கும் கட்டுப்பட்டு நடப்போமே

யானால் மக்களுக்கும் இறைவனுக்கும் செய்யும் கடமையில் பெரிதும் மாறுபட்டவராவோம். ஆகவே, நாம் நம் ஆணையாளருக்கும், மேலுள்ளவருக்கும் செய்யும் கடமைகளையோ, செயல்களையோ எண்ணும்போது, ஆண்டவனுக்கும் அயலவருக்கும் செய்யும் கடமைகளையும் சிந்தனை செய்ய வேண்டும். தலைவனின் முன்னின்று நேர்மையாகிய நியாயம் பெற விழையும் ஒருவன், நியாயம் பெறுவதற்கு முன் தலைவனது நேர்மையினை நினைத்தல் வேண்டும். தலைவனின் கட்டளையை மீறவேண்டிய காலமுமுண்டு. கட்டளை கடவுளுக்கும் மக்களுக்கும் மாறுபட்டதாக அமையுமாயின் எதிர்த்துப் போர் செய்யலாம். அதனால் அழிவு வரினும் வருக என்று அஞ்சாது நிற்கலாம். அதுதான் அஞ்சாமை. அறிஞர்கள் ஆண்டவனுக்கும் அடியவருக்கும் செய்ய வேண்டியன பல. இவ்வஞ்சாமையைத் தான் அப்பரும், இயேசுவும் பிறரும் கைக்கொண்டனர். இக்கருத்தை 'வெல்ஸ்' (H. G. Wells) என்ற ஆங்கிலப் பேரறிஞர் நன்கு விளக்கியுள்ளார்.

இத்தகைய நிலைகளை யெல்லாம் நெஞ்சிடை எண்ணின், ஆண்டவன் அருள் நலம் பெற்ற உயர்ந்தோர்கள் எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை என அறிவோம். அவர்கட்குப் பிற அஞ்சும்; பிறர் அஞ்சுவர். இக்கருத்தைச் சேக்கிழார் பெருமான் அப்பர் அடிகளார் கயிலை செல்லுங்கால் விளக்கிக் காட்டியுள்ளார்.

> 'ஆயவா திருளின்கண் ஏகும்அவ் வன்பர் தம்மை அணைந்துமுன்
> தீயவாய விலங்கு வல்தொழில் செய்ய அஞ்சின'

என்பன அவ்வடிகள்.

அறநெறிவாழும் அந்தணாளர்க்கும் அல்லல் வருதலைக் காண்கின்றோம்! ஏன் எனச் சிலர் வினவலாம். ஆம்! துன்பத்தினிடையே தான் சகிப்புத்தன்மை வெளிப்படும். இறைவன் அடியார்க்கு மறக்கருணை காட்டியே அருள் செய்கிறான். இன்பம் வரினும் துன்பம் வரினும் இறையருள்

என்றே ஏற்றுக்கொள்ளல் வேண்டும். இக்கருத்தை உட்கொண்டே தான் அப்பர் பெருமான் 'எப்பரிசாயினும் ஆக ஏத்துவன் எந்தையை' என்றும்,

எண்ணணி நாளும் எரியயிற் கூற்றுவன்
துண்ணெனத் தோன்றில் தூக்கும் வழிகண்டேன்
திண்ணன் சேறைத் திருச்செந் நெறியுறை
அண்ணலார் உளர் அஞ்சுவ தென்னுக்கே?

என்றும் கூறியுள்ளார். ஆகவே உண்மையில் இன்பம் பெறவேண்டின், உயர்வு உறவேண்டின், இறையருள் எய்த வேண்டின், மாயத் துயர்களுக்கு அஞ்சிமாளாது எது வரினும் வருக அல்லது எது 'போயினும் போக நின் இணையடிகள் மறவாத பேறு வேண்டும் என வேண்டின், 'அச்சந் தவிர்த்தானென் றூதாது சங்கே' என்று வீர முழக்கம் செய்து வாழவேண்டும். அவர்தம் திருமுகத்தே அருட் பொலிவு தோன்றும். இன்பம் இம்மையிலும் மறுமையிலும் கூடும். அவ்வாறு இன்பம் பெற்ற அடியார்கள் தோற்றத்தை ஆன்றோர் கூறியுள்ளனர். நாவரசர் இந்நலங்கள் எல்லாம் பெற்றபின் எவ்வாறு விளங்கினார் என்பதைச் சேக்கிழார் வாக்கால் தெரிந்து இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

தூயவெண் ணீறு துதைந்த பொன்மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோல் அன்புநீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே.

# வீரர் வழிபாடு

வழிபாடு உலகில் பலருக்குப் பலவகையாக நடைபெற்று வருகின்றது. யாவருக்கும் மேலான எல்லாம் வல்ல இறைவனை ஆண்டவன் என்ற அருமைத் திருப்பெயரால் அனைவரும் வணங்குகின்றனர். மக்களுள் சிலரும் பிறரால் வணங்கத்தகுந்த தகுதியில் விளங்குகின்றனர். எல்லா உயிரும் தொழும் பெற்றியாளர் சிலர் உலகில் அவ்வப் போது தோன்றி வாழ்கின்றனர் எனற்கு அறிஞர் பலர் எழுதிய சான்றுகள் இருக்கின்றன. அத்தகைய வழிபாடு ஏற்கும் அறிவுடையோரில் வீரரும் ஒரு சாரார்.

வீரர்யார்? எங்குஉளர்? என்றுபல கேள்விகள் எழும். இன்று வீரர் என்றவுடன் அசாம் நாட்டிற்கும், இந்தாலி நாட்டிற்கும் நம்மனம் நம்மை ஈர்த்துச் செல்லும் என்பது உறுதி. ஆம்! போர்க்களத்தே பகைவர்க்குப் பின் வாங்காது பொருது மடிவது, அன்றி வெற்றி காண்பது என்ற குறிக்கோளோடு போரிடும் வீரன் உயரிய வீரன் தான். அவனினும் சிறந்த வீரர் சிலர் நம்மிடை உள்ளனர்.

பண்டைத் தமிழ் நூல்களில் படை கொண்டு போர்க் களஞ் செல்லும் வீரன் புகழப்படுகின்றான். அவனது வீரம் சிறந்ததாகப் போற்றப்படுகின்றது. அன்னை வாழ்த்த, மனைவி முகம் நோக்கி, மைந்தரைத் தழுவிப் போர்க்குப் புறப்படுகின்றான் வில்லேருழவன். அவன் நோக்கம் போர்க்களத்தே, போரிடத்தே செறிந்து நிற்கின்றது. தன் நாட்டுக்காகப் போரிடப் போகின்றோம் என்ற உணர்ச்சி வெள்ளம் உற்றார் உறவினரையும் மறக்கச் செய்கிறது. தமக்கு உரிய அணியணிந்து போர்க் களத்தே பொலிகின்றான். அவனது தோற்றம் மலை

யென விளங்குகின்றது. போர் நடைபெறுகின்றது. வெற்றி அல்லது சாவு என்று அவன் உள்ளம் அவனைத் திடப்படுத்துகின்றது. வாள் கொண்டு களம் நுழைந்து பகைவரை வாட்டி வதைக்கின்றான். தன் வலியும் மாற்றான் வலியும் தக்கமுறையில் ஆய்ந்து போரிடுகின்றான். போர் சிறக்க நடைபெறுகின்றது.பகைவன் வலி மேலிடுகின்றது. அது கண்டு அஞ்சி அவ்வீரன் ஒதுங்கவில்லை. ஓடவுமில்லை. பகைவன் அம்பு பாய்ந்து வருகின்றது. வலிய மார்பினைத் திறந்து அந்த அம்பினை ஏற்கின்றான். போர்க்களத்தே வீரன் உயிர் விடுகின்றது. அவன் முகம் மகிழ்ச்சியால் பொலிகின்றது.

வீட்டில் அவன் தாய் 'சென்ற மைந்தன் வெற்றி யோடு திரும்பிவருவான்; அன்றி மார்பிடை அம்பு பட்டு மடிவான்' என்ற அளவில் மகிழ்ந்து கொண்டிருக்கின்றாள். வழிப்போக்கன் ஒருவன் 'அன்னாய்! உன்மைந்தன் போரிடைப் புறமுதுகு இட்டான். பகைவர் அம்பு முதுகில் தைத்துப் பட்டான்' என்று கூறக் கேட்ட தாயின் முகம் வியர்க்கிறது. அவ்வாறு அவன் புறமுது கிட்டது உண்மை யாயின் 'இந்தா அவனுக்குப் பால்கொடுத்த என் மார்பை அறுத்து விடுகிறேன்' என்று வெஞ்சினம் கூறுகின்றாள். கையில் வாளுடன் போர்க்களம் புகுகின்றாள். இறந்தவர் களைப் புரட்டிப் புரட்டிப் பார்க்கின்றாள். தன்மகன் மார்பில் அம்பு பட்டு மாய்ந்திருத்தலைக் காண்கிறாள். முகம் மலர் கின்றது. உள்ளம் ஈன்ற ஞான்றினும் பெரிது உவக்கிறது. இதைப் புறநானூற்று அடிகள் புலப்படுத்தும் விதம் சாலச் சிறந்தது.

அரசருக்கரசர் பொருது வெற்றிகாண விழைவர். வெண்ணிப்பறந்தலை போர்க்களமாகப் பொலிந்து நிற்கின்றது. சோழரும் சேரரும் செறிந்து போரிடுகின்றனர். இருபடையும் கைகலந்து கலாம் விளைக்கின்றன. யார் வெற்றியுறுவர் என்பது தெரியாத நிலையில் பெரும்போர் நடைபெறுகின்றது. திடீரென்று சேரர் நாட்டுச்சேனை போர் ஒழித்து நிற்

கின்றது. சோழர் வெற்றி பெறுகின்றனர். சேரர் போர் நிறுத்தின காரணம் தெரிந்திலது. மெல்ல ஒரு கிழவி அப்புறம் இருந்து வருகிறாள். சோழன் கரிகாற்பெருவளத்தான் வெற்றிச் சிறப்பினைக் கொண்டாட வருகின்றாள். அவன் அருகில் செல்கிறாள். 'அடே உன்னைக்காட்டிலும் சேரன் சிறந்தவன்' என்கிறாள். தோற்றவனைச் சிறந்தவன் என்ற அக்கிழவியை நோக்கி அனைவரும் வியக்கின்றனர்! 'எவ்வாறு அச்சேரன் சிறந்தான்?' என்று கேட்கின்றவர்க்கு அன்னை அழகாகப் பதிலளிக்கின்றனள்.

> "நின்னினும் நல்லன் அன்றே
> கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
> மிகப் புகழ் உலக மெய்திப்
> புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"

என்று வீரத்துடன் மொழிகின்றாள். 'காவிரிநாட்டுக் கரிகால் வளவ! நீ போரிடைச் சிறந்தாயாயினும் சேரலாதன் நின்னினும் நல்லன். அவன் போர்க்களத்தே சேனைகளைக் கண்டு வருங்கால் எவ்வாறோ அவன் முதுகில் அம்பு பட்டது. முதுகிடை அம்பு பட்டதைக் குறையென எண்ணிய அவன் வடக்கிருந்து உயிர் துறக்க நிச்சயித்தான். போரும் நின்றது. அவனும் வடக்கிருக்கிறான்!' என்கின்றனள். ஆகவே உண்மை வீரர் யாரென்பது நன்குபுலனாகும். வெற்றிபெற்றவனினும் புறப்புண் நாணிய அரசன் சிறந்தவன் எனக் காண்கின்றோம்.

இனி, மறைந்த வீரரைத் தமிழர் எவ்வாறு வழிபட்டனர் என்று நோக்குவதும் அமைவுடைத்தாகும். 'நடுகல்' என்பது நாட்டில் நிலைத்தகொன்றாகும். இறந்த வீரரைக் கல்லில் எழுதிப் பெயர் பொறித்து வழிபாடு செய்து வந்தனர் தமிழர்.

'பெயர் பொறித்து இனி நட்டனரே கல்லும்' என்பதும்,

'கல் நின்றான் எந்தை, கணவன் களப்பட்டான்' என்பதும் இக்கொள்கையை வலியுறுத்துவன. எனவே வீரருக்குக் கல்நடும் வழக்கம் இருந்ததென்பது நன்கு புலனாகின்றது.

'வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை'

என்றார் வள்ளுவர். ஆகவே போர் வீரரினும் வேறு சிறந்த வீரர் இருந்ததையும் நாம் அறிகிறோம். அஃதே போல் சொல்வீரர்க்குக் கல்நாட்டிய கதையும் கேட்டறிகின்றோம்.

தமிழ் நாட்டில் வீரர் வரிசையில் வைத்து எண்ணக் கூடிய பெண்களும் இருக்கின்றனர். அவருள் சிறந்தவர் கண்ணகி. வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்ப காவிரிப் பூம்பட்டினத்தை விட்டுக் கவினார்ந்த மதுரை நகர் நண்ணினாள் கண்ணகி. தன் சிலம்பை விற்கச் சென்ற கணவன்-கோவலன் அரசனால் கொல்லப்பட்டான் என உணர்கின்றாள். அரச அவையில் அஞ்சாது செல்கின்றாள். அவள் வீரமும் தோற்றமும் வாயிற்காவலன் வாக்கில் இளங்கோ வடிகள் விளக்கியுள்ளார்.

மன்னவை சென்றபின் அஞ்சலின்றித் தன் வழக்கை உணர்த்துகின்றாள். உண்மை உணர்ந்த அரசன் 'யானோ அரசன் யானோ கள்வன்' என மயங்கி வீழ்ந்து உயிர் விடுகின்றான். அவனும் ஓர் வீரனே. அரசன் இறந்த பிறகும் கண்ணகியின் சீற்றம் தணியவில்லை. அங்கியங் கடவுளை அருகழைக்கின்றாள்; மதுரைமா நகரைச் சுட்டெரிக்க ஆணையிடுகின்றாள்.

'பார்ப்பார் அறவோர் பசுப் பத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்க'

என்ற ஆணையின்படி அங்கியங்கடவுள் மதுரையைச் சுட்டெரிக்கின்றான். ஆகவே கண்ணகியின் வீரம் கற்பினைப் பிறந்ததாகக் காண்கின்றது. அவளது கற்புச்சினம் பகைவரைச்சுட்டது; மாநகரும் பட்டது. அவளது வீரநிலை கருதி அவளுக்குக் கல்லெடுத்தான் சேரன் செங்குட்டுவன்.

சீதையும் வீர வாழ்வுடையவள்! அங்கியங்கடவுள் அவள் வழியிருந்தான். அனுமன் வாலில் தீ வைத்ததை

அறிந்து சீதை அங்கியங்கடவுளைத் தொழுது வேண்டு கின்றாள்.

'நீயே உலகுக் கொருசான்று நிற்கே தெரியும் கற்பதனில்
தூயேன் என்னில் தொழுகின்றேன் எரியே அவனைச் சுடல்'

என்றாள். அங்கியங்கடவுளும் அவள் சொல்படி நடந்தான்.

சமயத்துறையிலேயும் வீரர் உள்ளனர். வீரர் இன்றேல் எச்சமயமும் இல்லாது நீங்கும் என்பது உறுதி. இயேசு உண்மை வீரர். முகம்மது உயரிய வீரர். அப்பர் அஞ்சா வீரர். புத்தர் புனித வீரர். இவ்வாறு வீரர்கள் எல்லாச் சமயத்தும் உள்ளனர்.

பெறுதற்கரிய நோயெலாம்-துன்பெலாம் பெற்றபின்னும் இயேசு அந்தணராகவே இருந்தார். செந்தண்மை அவரிடம் குடிகொண்டிருந்தது. அவர் தூய வீரராவார். அவர் வீரம் உலகிடை இன்று அன்புச் சமயத்தை ஓம்பி வருகின்றது. முகம்மதுவும் இன்னலுக்குட்பட்டு உழன்று வீரருள் வீரராய் நின்று தம் சமயத்தைக் காத்தார். அவர் தம் வீரம் இன்றும் பொங்காது நிற்கின்றது. புத்தர் வீரம் போற்றற்குரியதே. எந்நலமும் அமையப்பெற்ற அரச குடும்பத்தே பிறந்து, அனைத்து நலங்களோடும் வாழ்ந்த அவர் தம் வாழ்வெல்லாம் பொய் எனவிடுத்தார். மக்களும் பிறவும் படும் துன்பத்தை அறிந்தார். அத் துன்ப நீக்கத்துக்கு உரிய வழிநாடி ஓடினார். ஆங்கே அவரது வீரம் விளங்கது; இன்பம் கண்டார்; வீரத்திடை எழுச்சி பெற்றார். விளைந்தது பௌத்த சமயம் ஆகும்.

அறுபத்துமூன்று சிவனடியார் பெருமையைப் பாடினவர் சேக்கிழார். அந் நாயன்மார்களை அவர் வீரர் என்று அழைக்கின்றார். அவர்தம் அரும் செயல்களை வீரம் எனப் புகழ்கின்றார்.

'ஈர நெஞ்சினர் யாதும் குறைவிலார்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ'

என்று வாயாரக் கூறியுள்ளனர். 'செயற்கருஞ் செய்கை செய்த தீரனே' என்று ஒரு நாயனாரைச் சிவபெருமான்

வாயிலாக விளிக்கின்றனர். ஆம், அவர் வீரம் பொருந்திய வர் தாம். நாவரசர் வீரம் முன்னமே அறிந்தோம்! ஒரு குலத்துக்கொருமகனைப்பெற்றதாய்பிடிக்கத்தந்தை அறுப் பது வீரமன்றி வேறு யாது? பெருமழையில் முன்னாள் பெய்த நென்முளையை அடியார் பொருட்டு வாரிவந்து விற குக்குக் கூறையைப்பிரித்துச் சோறுக்கி அளித்து மகிழ்ந்த அரும் குணம் வீரத்தின் பாற்பட்டதன்றோ! கணவனுர்க் குப் பயன்படா உடலாற் பயனில்லை எனக்கருதிப் பேயுடம்பு பெற்ற சிறப்பு வீரத்தைக் காட்டுகிறதன்றோ! இலிங்கத் தின் கண்ணில் இரத்தம் வடியத் தன் கண்ணைத் தியா கம் செய்த நிரம் வீரமன்றோ! இவ்வாறே ஒவ்வொரு அடியா ரும் வீரராய் விளங்குகின்றனர். அவர்தம் அருஞ்செயல் அளவிடற்கரிது.

வீரர் என்பார் போர்க்களத்தே போரிடுபவர் மட்டு மன்று என்றும், வீரர் எத்துறையினும் சிறந்து நிற்கின்ற னர் என்றும் அறிந்தோம். அனைத்து வீரருக்கும் வழிபா டாற்றுவது நமது கடனுகும். வீரருள் வீரராக நாம் வைத்து எண்ணவேண்டியவர் எழுத்தோவிய வீரரே. திருவள்ளுவ ரும்,

> 'வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
> சொல்லே ருழவர் பகை'

என்றார். இதன் கருத்தையே எந்நாட்டறிஞரும் எடுத்து இயம்புகின்றனர். ஆங்கிலப் பேரறிஞரான, ஸ்காத் லாந்து நாட்டுக் கார்லைல் (Carlyle) என்பார் இத் தகைய அறிவு நிறைந்த வீரரைப்பற்றி அழகாக எழுதியுள் ளார். (Hero & Hero-worship)

சேரன் செங்குட்டுவன் ஆண்ட இடம் தெரியவில்லை - காலம் கணக்கிடப்படவில்லை. ஆனல் அக்காலத்து இளங் கோவடிகள் எழுதிய சிலப்பதிகாரம் சிலம்பொலி எழுப்பிச் செந்தமிழ் வழங்கும் எந்நாட்டினும் சிறந்து விளங்குகின் றது. வள்ளுவர் காலத்து ஆண்ட அரசன் யாரோ? அக் காலத்து நாட்டின் நிலையாதோ? ஆனல் வள்ளுவர் குறள்

இன்றும் என்றும் பேசப்படுவது உண்மை. எலிசபெத் அரசியார் ஆண்டகாலம் சரித அளவிலே பேசப்படுகிறது. ஆனால் அக்காலத்துச் செகப்பிரியர் (Shakespeare) எழுதிய எழுத்துக்கள் உலகமுழுதும் அறிஞர்களது மனத்தில்—வாக்கில்—பெட்டகங்களில் பொதிந்து கிடக்கின்றன. இவ்வாறு உலக அரசர்களெல்லாம்—உலக சரித்திரங்களெல்லாம்—உலக அமைப்புக்களெல்லாம் மாறிக் கொண்டே வரும்போது சொல்லேருழவர் கைத்திறன் மட்டும் உலகில் நின்று நிலவு கின்றது என்பது திண்ணம்!

சொல்லேருழவரே யாவரினும் மேம்பட்டவர் என்பது இன்று உலகறிந்தது. ஆங்கில நாட்டிலே ஓர் அமைச்சர் ஆட்சியிலே (Pitt the Younger) அப் பாராளு மன்றத்துக் கல்வி வீரரிடத்துக் கருணையுடைய ஒருவர் அவர்தம் நலம் பேண அரசியலார் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். தன் பதவிச் செருக்கால் தலைமை அமைச்சர் பதவியில் வீற்றிருந்தவர், 'இலக்கியமும், அதைச் சார்ந்த வீரரும் தம்மைத் தாமே பார்த்துக்கொள்வர்' என்று பதில் இறுத்தார். அதற்குச் சரியான மறு மொழி அவருக்கு வழங்கப்பட்டது. 'ஆம் இலக்கியம் தன் நலத்தைத் தான் தேடிக்கொள்ளும்; உன்னையும் கவனிக்கும்' என்ற பதில்தான் அது. உண்மைதான்! சொல்லேருழவர் மனம் வைப்பின் அரசனை ஆண்டியாக்கலாம்; ஆண்டியை அரசனாக்கலாம். இந்த உண்மையை இன்று பத்திரிகை உலகம் நமக்கு நன்கு புலப்படுத்துகிறது. எனவே எழுத்தறி புலவர்தம் ஏற்றமிக்க வீரமே சிறந்தது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

இந்த வீரரை இன்று உலகம் போற்றுகிறதா? பெரும்பாலும் இல்லை என்று சொல்லலாம். சொல்லேருழவர் வீரத்தை ஓம்பாவகையில் எந்த நாடும் ஏற்றமுறாது. உயர்த்திப் பேசாவிடினும் மற்றவரோடு ஒத்து நோக்க வேண்டிய தன்மையையாவதுகொள்ளவேண்டும். மேலைநாட்டையாண்டுலகம் நடுங்கப் போர்புரிந்த வல்லவர் ஒருவர் தான் பகை

வர் குண்டுக்கும் பிற கொடுமைக்கும் அஞ்ச வில்லை என்றும், எழுத்தாளர்தம் பேனா முனைக்கே அஞ்சுவதாகவும் அஞ்சிக் கூறுகின்றார்.

நாடு நலம்பெறவேண்டின், அதை ஆளும் பொறுப்பு முதலியவற்றைக் கற்றறிந்த அறிஞரிடத்தே ஒப்படைக்க வேண்டும். அவர்தம் அறிவும் ஆற்றலும் நாட்டை நன்னிலைக்குக் கொண்டு வரும் என்பது உறுதி. கற்றறிந்தவர்கள் தாமே உயர்ந்தவர் என்று கூறி முன்வந்து நிற்க மாட்டார்கள். பிறர்தம் புகழ்விரும்பாராய் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற கொள்கையை வாழ்விடைக் கடைப்பிடித்துச் செய்வது பிறர் அறியாவகையில் சிறந்த செயலாற்றி நிற்பர். ஆனால் அவர்தம் புகழே பொன்றாப் புகழாகும். அவர் கையில் நாட்டை நல்கின் நாட்டின் புகழும் பொன்றாப் புகழாகும். அத்தகைய நன்முயற்சியில் அனைவரும் முற்படவேண்டும். சொல்லேருழவரைப் பாராளும் மன்னராக—அமைச்சராக அமைக்கும்பணி ஒவ்வொரு நாட்டிற்கும் இன்றியமையாதது. அப்பணியில் ஒவ்வொருவரையும் உடன்படுத்தி அவர்களைத் தலைவராகக்கொண்ட நாடு வேறு எத்துறையில் தாழ்ந்திருப்பினும் உயர்ந்ததாகும். வேறு எந்நலனும் பெற்றிருப்பினும் சொல்லேருழவர் தலைமை இன்றேல் ஒன்றும் இல்லாததே யாகும். அவரைத் தலைவராக ஏற்று அவர் வழி நாடு ஒழுகுதலே வீரர் வழிபாட்டின் இலக்கு. இந்நோக்கினைக் கொண்டு ஒவ்வொரு நாடும் தக்க தலைவரைப் பெற்று உயர்வதாக! அவர்தம் அருஞ்செயல் அவனியை வாழ்விப்பதாக! வாழ்க வீரர்! சொல்லேருழவர் புகழ்சிறக்க!

# இளைஞர் தொண்டு

இளமை என்பதோடு எழில் இணைந்து வருகின்றது. இளமை இன்றேல் எழிலில்லை. எழிலின்றேல் இளமையில்லை. ஆகவே, எழிலொடு கட்டிளங்காளையாய்—கன்னியாய்—வாழும் வாழ்க்கையே சாலச்சிறந்தது. தன் ஆயுளின் இறுதியை அடைந்த ஒருவனை 'உன் வாழ்நாளில் மிகுந்த மகிழ்ந்திருந்த நாள் எது?' என்று கேட்டால் அவன் தட்டாது உடனே இளமைக்காலம் என்று பதில் இறுப்பான். ஒன்றும் அறியாத குழவிப்பருவத்தையும், மனைவி மக்களோடு வாழ்வு நடாத்தும் இல்வாழ்க்கையையும், பிற்கால வாழ்க்கையையும் எண்ணாது, உண்பன உண்டு, உடுப்பன உடுத்து ஆடிப்பாடித் திரிந்த கல்லா இளமைக் காலத்தையே அவன் சிறந்ததெனப் போற்றுவான். இளைஞர் வலிமை பெற்றுச் செயல் நடத்தப் புகுவாராயின் அச்செயல் ஏற்றமுறும் என்பது உறுதி. இளைஞர் உள்ளம் உயர்வுடையது. இளைஞர் உள்ளத்தே அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் என்ற நான்கும் குடிகொண்டிருத்தல் வேண்டும்.

இன்றைய இளைஞர் உலகம்—அதிலும் இந்திய நாட்டு இளைஞர் உலகம் அவ்வளவு உயர்வுடையதாகக் காணப்படவில்லை. உயரிய தோற்றமும் உள்ளொளியும் பெற்ற இளைஞர் எந்நாட்டுக்கும் தேவை. அவர்களே நாட்டை உருவாக்கும் திருப்பணியை மேற்கொள்ளக் கூடியவர்கள். இளைஞர் உலகு விரைந்து இன்பத்தை நாடுகிறது. அதுவும் நேர்மையற்ற இன்பம். அவ்வின்பம் விழைந்து அல்லல் உறும் இளைஞருலகம் எவ்வாறு ஏற்றமுறும்? திண்ணிய உடலும் செவ்விய மனமுமுடைய இளைஞர்கள் இன்று பேரணி வகுத்துப் பார்நலம் புரக்க முற்படுகின்றனர். நாட்டைப் பல்வேறு இன்னல்கள் பற்றி நிற்கின்றன. அவற்றை நீக்க வேண்டுவது இளைஞர் கடன்.

இந்திய நாட்டில் இளைஞர் ஆற்ற வேண்டிய தொண்டு மிகப்பல. ஒவ்வொரு இந்திய இளைஞனும் தன் வாழ்நாளில் தாய் நாட்டிற்கு நிலைத்த பணி ஒன்றைச் செய்தேதீருவேன் என்று உறுதி செய்துகொள்ள வேண்டும். வாக்கால் உறுதி செய்வது எளிதுதான். அதை நடைமுறையில் அமைப்பது எளிதன்று.

இன்றைய போர்நிலை உலகமக்களுக்கு ஆக்க வேண்டிய நலத்தை யெல்லாம் தடுத்து நிற்கின்றது. உலகமக்களில் அறிஞர்களெல்லாம் ஒன்றுகூடிப் போர் முடிந்தபின் பார்நிலையைச் சீர்திருத்தவழிகோலுகின்றனர். எங்குநோக்கினும் வருங்கால உலகைப்பற்றிய பேச்சாகவே இருக்கின்றது. இந்தியநாட்டிலும் வருங்காலத்துப் பல ஆக்கப் பணிகள் செய்யப்போவதாக அரசியலார் அறிவிக்கின்றனர். கல்வி வளர்ச்சி, அறிவியல் வளர்ச்சி, கைத்தொழில் வாணிப வளர்ச்சி, நலத்துறை வளர்ச்சி முதலியன விரைவில் கவனிக்கப்படப் போகின்றன என அறிகின்றோம். இவற்றிற்கெல்லாம் இளைஞர் உதவி தேவை.

நம் கண்கொண்டு உலகெலாம் சுற்றிவந்து இந்திய நாட்டை நோக்கின் இதன் கல்வி நிலை நன்குவெளிப்படும் நூற்றுக்கு எண்பத்தெட்டு ஆண்களும், தொண்ணூற்றாறு பெண்களும் பயின்ற ஜப்பான் நாட்டுடன் ஒத்து நோக்கின் நம் கல்வி நிலை எண்ணிறகடங்குமோ!

நம் நாட்டு மக்கள் தொகைக் கணக்கினைக் (1941) கண்டால் நம் நாட்டில் கற்றவர் தொகை நன்கு விளங்கும். 100-க்கு 8·62 ஆண்களும் 2·03 பெண்களும் கல்விபெறுகின்றனர். ஆரம்பப் பள்ளிகளில் 86 லட்சம் பிள்ளைகளும், 28 லட்சம் பெண்களும் பயில்கின்றனர். உயர்தரப் பாடசாலைகளில் 23 லட்சம் ஆண்களும் 4 லட்சம் பெண்களும் பயில்கின்றனர். கல்லூரிகளில் 134,000 ஆண்களும் 11,000 பெண்களுமே பயில்கின்றனர். இது கல்வி நிலை பற்றி அரசாங்கத்தார் ஏற்றுக் கொண்ட கணக்காகும். 40 கோடி மக்களில் இவ்வாறு குறைந்த மக்கள் கல்வி பயில்கின்

றனரென்றால், இந்நாட்டு முன்னேற்றம் எவ்வளவு தடைப்படும் என்று சொல்ல வேண்டுவதில்லை. உறங்கிக் கிடந்த ஜப்பான் நாடு பிறவல்லரசுகளைப் போல் ஓர் வல்லரசாக எண்ணப்படுகிறது. எதனால்? கல்வி வளர்ச்சியினால்! ஆனால் அத்தகைய கல்வி நமக்கு வேண்டாம். அன்பு பற்றிய, உயர்ந்த கல்வி ஒவ்வொருவர் உள்ளத்திலும் முகிழ்ப்பதாக!

இக்கல்வி வளர்ச்சியில் இளைஞர் கருத்திருத்த வேண்டும். அறியாமை மூடிய இந்திய நாட்டில் அரசியலார் எவ்வளவு கட்டாயப்படுத்திக் கல்வி புகட்ட முயன்றபோதிலும் அவர்கள் முழு வெற்றிபெற முடியாது. இளைஞர்களது உடன் உழைப்புத் தேவை. இன்று இளைஞர்கள் கல்லூரிகளில் கல்வி நலம் பெறுகின்றனர். கல்வி கற்பது அடிமை வாழ்வு வாழ்வதற்கே என எண்ணுகின்றனர். அது அறியாமையின் பாற்பட்டதாகும். கல்வி கற்பது நமக்கும் பிறர்க்கும் பயன்படவேயாம்.

கல்வி எனும் பேறு உள்ளத்தை உயர்த்திப் பெருந் தெளிக்கின்றது. கல்வி பண்டைத் தமிழ் நாட்டில் எவ்வளவு ஓங்கி இருந்தது என்பதை எண்ணலாம். ஆண்களும் பெண்டிரும், கணவனும் மனைவியும், அரசனும் ஆண்டியும் ஒருவரோடொருவர் பேசும்போது தூய தமிழ்ப் பாட்டில் பேசினார்கள். ஆண்களோடு பெண்களும் கல்வி கற்றிருந்தனர். கணவர் மனைவியர் காதல் வாழ்க்கை கூடச் செய்யுளில் நிகழ்ந்ததை அறிகின்றோம். கற்ற கல்வியால் அறிவு மிகுந்தது, மாந்தர்க்குக் கற்றனைத்தூறும் அறிவு ஆதலான். அறிவு பெற்றபின் ஆண்டவனை நினைக்க எண்ணம் உண்டாயிற்று. 'கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅர் எனின்' என்ற வாக்கு மெய்யாயிற்று. கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்ற மொழியும் பிறந்தது. ஆனால் இன்றைய நிலை வேறு. கல்வியும் கல்வியால் வரும் கடவுள் அறிவும் மிகக் குறைவு. ஆகவே கோயிலை நாடிக் கும்பிடுபவர் குறைந்தனர். இக் காலத்து வேண்டுவது கல்விப் பணியாகும். உண்மைக்

கல்வியில் ஒவ்வொருவரும் ஊக்கங் கொள்ளவேண்டும். பிற அறங்களெல்லாம் அப்பாற்பட்டன. கல்வி அறம் அனைத்தினும் சிறந்தது, இதை உணர்ந்த பாரதியார்,

இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்க ஒளிர நிறுத்தல்
அன்னயாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்

என்று கூறுகின்றார். எனவே நாட்டு முன்னேற்றம், கல்வி முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டதென்பதை இளைஞர்கள் உணரவேண்டும். கல்வி என்பது ஏட்டுப் படிப்பு ஒன்று மட்டுமன்று; கலைவளர்ச்சி. வெறும் ஏட்டுப்படிப்பினைப் பயின்று, இயந்திரம் போன்று அலுவலகங்களில் எழுத்தாளராக அடிமை வாழ்வு வாழும் கல்வி வேண்டாம். மாக்களை மக்களாக்கும் கல்வி வேண்டும். உலகில் அனைவரும் சமம் என்னும் கொள்கையுடைய கல்வி நிலைபெறவேண்டும். நாட்டில் குழப்பத்தை நீக்கும் நல்ல கல்வி நிலைபெறவேண்டும்.

கற்றறிந்த இளைஞர்கள் ஊர் தொறும் சென்று கல்வியைப் பரப்பல் வேண்டும். இளைஞருக்கும் முதியோருக்கும் ஒல்லும் வகையெல்லாம் உரியன செய்து கல்வியை வளர்க்க வேண்டும். அக்கல்வி நலம் மலர்ந்து நாட்டை நன்னிலைக்குக் கொணரவேண்டும்.

கல்வியை அடுத்து நோக்கவேண்டுவது கைத்தொழில். மேலை நாடுகளெல்லாம் விரைந்து முன்னேறுவதற்குக் காரணம் கைத்தொழில்தான். கல்வியோடு கைத்தொழில் கற்பிக்கவேண்டும் என்று அனைவரும் உணர்ந்துள்ளனர். இன்று உலகம் கைத்தொழில் பயின்றவர்களையே விரும்புகின்றது. கலைத்தலைமைப் பட்டம்பெற்ற ஒருவனைக் காட்டி

லும் கல்லடுக்கும் கொல்லத்துக்காரன் அதிக சம்பளம் பெறுகின்றான். கல்லூரிப் படிப்பில் சிறப்பு இல்லை. மேலை நாட்டுப்பட்டதாரிகளெல்லாம் ஆஸ்திரேலியப் பாதை ஓரங்களில் கல்லுடைக்கின்றனர் என்று ஆங்கில அறிஞர் ஒருவர் கூறுகின்றனர். கைத்தொழில் திறமை உடைய ஒருவன் அவன் திறமைக்கேற்ற சிறந்த ஊதியத்தைப் பெறுகிறான். ஆனால் கல்வி நலம் பெற்றவனோ மற்றச் சாதாரண அறிவுடையவனோடு ஒத்து எண்ணப்படுகின்றான். ஆகவே கைத்தொழில் இன்று மிக அவசியம் என்பது சொல்லாமலே அமையும்.

நிற்க, கல்வியும் கைத்தொழிலும் இளைஞர்களால் பெரிதும் போற்றப்படவேண்டும் எனஅறிந்தோம். அதற்கு அடிப்படையாக அரசியலார் கல்வித்திட்டத்தை மாற்றி அமைக்கவேண்டும். ஒவ்வொரு மாணவனும் கைத்தொழில் ஒன்று கட்டாயம் கற்றாகவேண்டும் என்ற நியதி இருக்க வேண்டும். செல்வச்சிறுவர்கள் கல்வி கற்று நாட்டு நலனை நாடி உழைக்க முன் வரவேண்டும். எவ்வளவு சிறந்ததாயினும் ஒருநாடு வளர்ச்சியுறவிடின் பாழ்பட்டுப்போகும். இளைஞர் இந்திய நாட்டைத் தாழ்நிலை உறாமல் உயர்நிலைக்குக் கொணர ஒன்றுபட்டு உழைப்பார்களாக!

கல்வி, கைத்தொழில் இவைகளோடு நலத்துறை முதலியவற்றிலும் இளைஞர் கருத்திருத்தவேண்டும். நம் நாட்டு நலத்துறை மிகச்சீர்கேடான நிலையில் இருக்கின்றது. மற்றத் துறைகளில் பிற்போக்காக உள்ளதுபோலவே, நலத்துறையும் சீர்கேடடைந்துள்ளது. மக்களது சராசரி வாழ்வு ஆண்டு முப்பதுக்கு மேற் செல்லவில்லை. அதற்குக் காரணம் நாம் நம்மைப் பேணாததுதான். எத்தனை மக்கள் தம்நலம் கருதாது வாழ்கின்றனர்? நம்நாடு கிராமங்கள் மிகுந்த நாடு. கிராமங்களிலெல்லாம் நலத்துறை சீர்கேடடைந்துள்ளதை அறியாதார் யார்? இளைஞர் எல்லாம் பதவிவேட்டை யாடாது பணியாற்ற முற்படவேண்டும். ஒவ்வொரு இளைஞரும் ஆண்டொன்றுக்கு ஒரு சிறு கிரா

மத்தைக் கல்வி, கைத்தொழில், நலத்துறை முதலியவற்றில் முன்னேற்றத்துக்குக் கொண்டுவருவாராயின் விரைவில் நாடு நலமுறும்.

கிராமம் என்று எண்ணும்போது வேளாண்மை உடன் வருகின்றது. 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்பது வள்ளுவர் மொழி. ஆதலே ஏர்வளத்தை ஏற்றமுறச் செய்தலும் இளைஞர் கடன். கல்லாக் கிராம மக்களுக்குத் தற்காலத்து விவசாயம் அடைந்திருக்கும் வளர்ச்சியையும் கூட்டுறவுச் சங்கங்களின் ஏற்றத்தையும் விளக்கி உரைக்க வேண்டும். அவர்களைப் பயிர்த்தொழில் வளம்படுத்தற்கான வழிகளில் வளர்க்கவேண்டும்.

இவைகளுக்கெல்லாம் இளைஞர் முன்னிற்கவேண்டும் என்று கண்டோம். ஆனால் அவ்வாறு முன்னிற்பதற்கு அவ்விளைஞர்தம் உள்ளம் தூயதாய் அமைதல் வேண்டும். உடல் நல்லுரம் பெற்றதாக வேண்டும். நல்லுரம் பெற்ற உடம்பினைப் பெற, உரிய வழியில் உடலை ஓம்பவேண்டும். தீய எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் சிறிதும் இடமளித்தலாகாது. உடல் உரம் பெற உளம் உரம் பெற வேண்டும். அதற்கு வேண்டுவது மனத்தூய்மை. அறிஞர் குற்றம் என்று கண்ட வற்றைத் தூரத்தே விலக்கி ஓட்ட வேண்டும். மனம், வாக்கு, காயம், என்ற மூன்றிடத்தும் மக்கள் பிழைபடுகின்றனர். அப்பிழைகள் யாவை? மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் இம்மூவ்வழிக் குற்றங்களையும் நன்கு விளக்கியுள்ளார்.

'கொலையே களவே காமத் தீவிழைவு
உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லில் தோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னில் உதிப்பன மூன்றும்'
பத்துக் குற்றம்,

என்று பறைசாற்றுகின்றனர். இப்பத்துக் குற்றங்களுக்கும் இளைஞர் உள்ளங்களை இடமாக்க இசையலாகாது.

'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும் மாணா செய்யாமை தலை' என்ற குறள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் எழுதப்படவேண்டும்.

பெறற்கரும் இத்தகைய நலன்களெல்லாம் பெற்றபின் இளைஞருள்ளத்தே பரந்த நோக்கம் உண்டாகும். தன்னாடு தன்னூர் என்ற குறுகிய மனப்பான்மை நீங்கி 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உயரிய உளப்பண்பு தோன்றும். அப்பண்பு உலகத்தை ஒன்றாகச் சேர்க்கும். உலகத்தே சாதி சமய நிற வேறுபாடுகளெல்லாம் இல்லாது நீக்கும். தனிநாடென்ற மனப்பான்மை நீங்கி ஒரே உலகமென்ற கொள்கையும், தனிச்சாதி என்ற தன்மை நீங்கி 'எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம்' என்ற ஏற்றந் தரு உணர்ச்சியும், எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற சிந்தையும் தோன்றும். பிறகு உலகமுழுதும் ஒரே குடும்பமாகும். அக்குடும்ப வளர்ச்சி உலகில் போர் முதலிய அச்சத்தைத் நீக்கும். அந்நாளை நாம் விரைந்து எதிர்நோக்கவேண்டும். இளைஞர்கள் அதற்கு ஆவன செய்ய வேண்டும்.

உலகக்குடும்பம் தோன்றுதற்குரிய காலம் அண்மையிலுள்ளது. இன்றைய போர்முடிந்தவுடன் உலகை ஒன்றுபடுத்த வேண்டுமெனப் பலர் விழைகின்றனர். இன்று முடியாவிடினும் விரைவில் உலகம் ஒன்றுபடும். தொழிலாளர் இயக்கம், ரஷ்ய இயக்கம் போன்ற பேரியக்கங்கள் அதற்கு வழி கோலிவிட்டன. வழியிடை எதிர் நின்று யார் வேண்டாமென்று தடுப்பினும் 'உலகக் குடும்ப உணர்ச்சி' ஓங்கி நிற்கும் என்பது உறுதி. இவ்வுறுதி கண்டு இன்றைய இளைஞர் – உலக இளைஞர் ஒருமனப்படவேண்டும். அவர் தம் மனவழியே உலகம் நலமுறுக!

# நடு நிசி மணி ஒலி!

இறைவா வணக்கம்! இதோ இன்று புதுநாள் புலர்கின்றது. உலகமெங்கணும் ஓராண்டு ஓடிவிட்டதற்கான குறிகள் காணப்படுகின்றன. அதோ தெரிகின்றது கிறித்தவ வழிபாட்டிடம். நடு நிசியின் மணி ஒலி நன்கு நம் காதை அடைகின்றது. 'வாழ்விடை உறங்கும் மக்காள்! இதோ ஓராண்டு முடிந்துவிட்டது. என் ஒலி கேட்டு ஏகின பன்னிரண்டு திங்கள். இந்த ஆண்டின் கழிவையும், வரும் ஆண்டின் தெளிவையும், "இதோ என் ஒலி உணர்த்துகின்றது' என்று செம்மாந்து மணி தன் ஒலியினைப் பரப்புகின்றது. ஆம்! சென்ற ஆண்டின் இதே நாளில் நின் எதிர்நின்று சிறக்க வாழ்த்தினேன். அந்நினைவு நேற்றென எதிர் நிற்கின்றது! ஆனால் கழிந்த ஆண்டோ ஒன்று!

இந்த நடு நிசி மணி ஒலி மக்களது ஐந்தாண்டைப் பருவத்துக்கு முன்னே அவர்கள் காதில் விழுந்துள்ளது. அவரவர்தம் வயதுக் கேற்பப் பல முறையோ சில முறையோ ஒவ்வொருவரும் இம்மணி ஒலியைக் கேட்டிருப்பார்கள். ஆம்! இம்மணி கிறித்தவ ஆலயத்தே சிறப்பாக அடிக்கும் மணியாயினும், உலக மக்கள் அனைவருக்கும் உணர்வூட்டும் அன்பு மணி. 'அன்பின் வழிய துயிர் நிலை' என்ற அறநெறியை உலகினுக்கு எடுத்துக்காட்டி, அன்புருவில் அறம் வளர்த்து, பிறர் வாழத் தான் வருந்திச் சிலுவை ஏறிச் செம்மையால் நலம்புரிந்து நல்லவர்தம் மெய்வழியைப் பின்பற்றும் கிறித்தவர் இந்நாளைப் பொன் எனப் போற்றுவர். போற்ற வேண்டுவது அவர்தம் அருங்கடன். அவர்தம் அருஞ்செயல் ஒட்டி இன்று உலகிடைப் புது ஆண்டின் தொடக்கம் கொண்டாடப் பெறுகின்றது.

கொண்டாட்டம்! வழிபாடு! இவை எற்றுக்கு? கழிந்த ஆண்டில் பெற்ற இன்பத்திற்காகவா? வரும் ஆண்டில் எதிர் நோக்கும் இன்பத்திற்காகவா? அவரவர்கள் இயல்பிற்கேற்ப விடை இறுப்பர். பெரும்பாலோர் புத்தாண்டின் தொடக்கத்தினை மகிழ்வில் கொண்டாடுவர். ஆனால் அவர்கள் மகிழக் காரணம் யாதோ? நாமறியோம்? இறை உண்டென்பாரும், இல்லை என்பாரும் உலக இனத்தை ஒத்து நோக்க வேண்டும் என்கின்றனர். 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம்' என்று எழுதிப் பேசுகின்றனர். இதையே இயேசுவும், நம் சைவத் தலைவர்களும், பிற சமயப் பெரியவர்களும் அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

'நடமாடும் கோயில் நம்பர்க்கொன்று ஈயில், படமாடும் கோயில் பரமர்க்கங்காகும்' என்ற திருமூலர் திருவாக்கும், 'உன்னைப்போல் பிறனை நேசி; நீ அயலாரிடம் அன்பு கூர்வாயாகில் அது ஆண்டவனிடம் அன்பு கூர்வதாகும்' என்ற இயேசுவின் கட்டளைகளும் ஒப்பு நோக்கத்தக்கன. அவர்தம் நாட்களைக் கொண்டாடும் இருவகையோரும் இச் செயல்களைச் சிந்திக்கின்றனரா? இல்லை என்று பெரும்பாலும் சொல்லலாம். சிந்திப்பின் இன்று உலகை அழித்து, அவதிக்குள்ளாக்கி வரும் ஆணவம் அமைந்த போர் உண்டோ? இல்லை! இல்லை! அன்பு நிலைதுறந்தது. கடவுள் தன்மைக்கு மாறிய பிற செயல்கள் இடம்பெற்றன. வழிபாட்டில் வேண்டுவது ஒன்று; செயலில் செய்வது ஒன்று. 'உம்முடைய இராச்சியம் வருவதாக' என்று ஒவ்வொரு கிறித்தவரும் இன்று மனங் குளிர, வாய் குளிர, மெய் குளிரச் செவி குளிர மொழிவர். ஆனால் வேண்டுவது தம்முடைய இராச்சியம். 'என்னிலும் மிக்காரும் ஒப்பாரும் இல்லை' என்ற கருத்தில் இராச்சியப் பெருக்கிற்கன்றோ இன்று நடைபெறுகின்றது இப்போர். இருக்கும் நாட்டை விட விருப்பமில்லா மனம் ஒரு புறமும், மேலும் நாடு பற்றவேண்டும் என்ற மனம் ஒரு புறமும் இப்போரைக் கொத்தளிக்கச் செய்கின்றன. அந்தோ! அது மாத்திரமன்று! மக்களினத்தில்

எத்தனை வேறுபாடு! சாதி வேறுபாடு எத்தனை? சமயவேறுபாடு எத்தனை? நீதி வேறுபாடு எத்தனை? நிற வேறு பாடு எத்தனை? அறிவு குறைந்த மிருகங்களோடும் கூடிக் குலவக்கூசாத மக்களினத்தார் ஆறறிவு பெற்ற பிற மக்களோடு கலக்கக்கூசுவதும் நேர்மையோ! மக்களில் உயர்வு தாழ்வு கற்பிக்கும் சாதி வேற்றுமை தான் எத்தனை! அதுவும் நம் நாட்டில் சொல்லத்தரமன்று! சமயப்போரோ பெரிது. சாதியின் பேரால் நாட்டுப்பிரிவு! சமயத்தின் பேரால் நாட்டுப்பிரிவு! இன்னும் எத்தனைப் பிரிவுகளோ! யாரறிவார்?

இம்மட்டோ! இன்று நடக்கும் போர்ச்செயல் முறை யாது? யுத்தவீரர் மட்டுமா-போர்க்களம் சென்று பொரும் வீரர் மட்டுமா இன்று மடிகின்றனர். அந்தோ! எழுத முடியுங்கொல்! போரறியா ஏழை மக்கள்- இளங் குழந்தைகள், அருங்கலைகள் அனைத்தும் அழிக்கப் படுகின்றன. எதனால்? நாட்டாசையால்! தத்தம் இராச்சியத்தை நிலை நிறுத்தும் நோக்கத்தால்! இந் நோக்கத்தை எண்ணி, இறையே! உன் இராச்சியம் வரவேண்டும் என்று வாயால் மாத்திரம் கூறினால் போதுமா? போதாது! போதாது!

இந்த எண்ணத்தை நடு நிசி மணி ஒலி நமக்கு நினைவூட்டவில்லையா? 'இதோ என் ஒலியில் ஓராண்டு நீங்கிற்று. இனிய அருள் இராச்சியத்திற்கு நீ ஆற்றிய பணி என்ன?' என்று கேட்கின்றது. மக்கள் கூறும் பதில் என்ன? ஒன்றும் இல்லை. இல்லையா? உண்டு. 'இறைவ! எங்கள் சொல் கண்டு ஏமாறவேண்டாம். எங்கள் உள்ளம் எங்கள் இராச்சியத்தில் இருக்கிறது. அது உன் இராச்சியத்தில் படிவதெங்ஙனம்? உன் இராச்சியம் அன்பில்—அருளில்—அறனில் விளைவது. எங்களுடையதோ வன்பில்—வாழ்வில்—வழக்கில் ஒழிவது' என்று பதில் வரும். வந்தே தீரும்! அப்பதிலை மாற்றி அன்புலகில் நாமெல்லாம் படியவேண்டும். எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற தூய சிந்தையை உண்டாக்க வேண்டுமென்பதே இவ் அன்பு மணியின் நோக்கம்.

அதோ உயர்ந்த மாளிகை. அடுக்குகள் பல. ஆரவாரமும், உற்சாகமும் கரைகடந்துள்ளன. அவர்கள் அடையும் இன்பம் எது? அன்பு மணி ஒலி கேட்பதாலா? அல்ல. அது செல்வர் என்று சொல்லப்படுவோர் கூட்டம். குடி முதலிய கொடுங்கோன்மைகள் குடிகொண்ட இடம். ஏழைகளின் உழைப்புகளினால் எல்லாச் செல்வமும் தம்மதெனக் கொண்டு பொருளை எல்லாம் பெற்று அப்பொருளால் பெருமகிழ்வு எய்துகின்றனர். பொருள் பெறுவதால் இழுக்கொன்றுமில்லை, பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை யாதலான். ஆனால், அப்பொருள் செல்லும் வழிகளைச் சிந்தை செய்து பார்த்தல் ஒருசால் அமைவுடைத்தாகும்! 'செம்மையில், அறம் செய்யாதார் இரவியாய் ஏதற வேண்டிக் கள்ளும் சூதும் நான்முகன் படைத்தவாறே' என்று யாரோ ஒருவர் கூறிய ஒலி என் காதில் ஒலிக்கின்றது. பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளைப் பெற்ற பயன் ஈத்துவக்கும் இன்பம். அந்த இன்பினை விரும்பிப் பெறவேண்டுவது அறிவு நிரம்பிய செல்வர்தங் கடன்.

'அல்லல்வெவ் வினையால் இன்னும் உற்பவமுண்
டாயினும் எழுபிறப்பும்
இல்லையென் றுரைப்போர்க் கில்லைக் குறையயா
ஐயனே அளித்தருள்'

என்று ஆண்டவனை நோக்கி வேண்டிய அறவுரையைச் சிந்தித்தல் வேண்டும். தற்காலம் பெருஞ்செல்வர் அவ்வாறு எண்ணுவது உண்டோ? ஒரு சிலர் எண்ணுகின்றனர்; இயற்றுகின்றனர்; அந்த ஈத்துவக்கும் இன்பம் பெறுகின்றனர். அதனால்தான் உலகம் நடைபெறுகிறது. ஆனால் பெரும் பகுதியார் அவ்வாறு ஆக்குவது உண்டோ?

மற்றொருபுறம் அற்றைக் கூழுக்கு அலமரும் ஏழையின் உருவம் தோற்றமளிக்கின்றது. கதிரவன் ஒளிவிடும் கடும் வயல்வெளியிடத்தும், கைத்தொழிற் சாலைகளிடத்தும் கணக்கற்ற ஏழைப் பாட்டாளி மக்கள் நாள் முழுதும்

உழைத்து ஒருவேளை உணவுக்கும் போதா ஊதியம் பெறு கின்றனர், ஏழைப்பாட்டாளி இதயங் களிக்கச் செய்யும் எந்த அரசாங்கமும் இன்று உலகிடை உண்மையைப் பர ப்பவில்லை. அவர்தம் உழைப்பால் ஆக்கம்பெற்று அவ ரையே அலமந்து வாடச் செய்யும் இச் செயல் நாட்டார் நகை செய்வதன்றே! அந்தோ! வாடி வதங்கி நரம்பும் எலும்புமாய்க் காட்சியளிக்கும் காட்சி ஒருபுறம்; அந்நரம் பொடியப் படும் பாட்டினால் உயர்ந்த பொருள் பெற்று உப் பரிகையில் (அமர்ந்து உயரிய உணவுண்டு) உடல் பருத்திருக் கும் காட்சி ஒருபுறம். இவ்வாறு இருவகைப்பட்ட நிலையை நீக்கவேண்டுமென்பதே இவ் அன்பு மணியின் நோக்கம். பணக்காரரைப்பார்த்து 'அன்பு மணி எச்சரிக்கை செய் கிறது! "என்னே! செல்வமும் சீரும் சேரப் பெற்றும் செய்வதறியாது வாழும் மக்களே! கேளுங்கள். கேளுங் கள். உங்களுக்கு உணர்வு உண்டாகிய அந்த அறிவு வாழ்நாள் தொடங்கியது முதல் இன்றுவரையில் ஒவ்வோ ராண்டு கழிந்தொழிவதை நீங்கள் என் ஒலி மூலம் கேட்டீர் கள். சென்றதினி மீளாது. இத்துணை ஒலிகளுக்கிடை யில் ஏகின நாட்கள் எத்தனை? அத்துணை நாட்களில் ஆற்றியபணி என்ன? எல்லாச் சமயத்தவரும், சமயம் ஒன்றும் பற்றாதவரும் ஒருசேரக் கூறும் உறுதி மொழி யை உணர்ந்தீர்களா? 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப் பதுவே, அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே' என உலக இன்பத்தை விழையும் உயர்ந்தோர் மொழிகள் உங்கள் காதுகளில் கேட்கின்றனவா ? கேளுங்கள்! 'தனி ஒருவனுக்கு உணவிலை எனில் சகத்தினை அழித்திடுவோம்' என்ற பெரியார் மொழிகள் உங்கள் செவிப்படவில்லையா? படுகின்றது; கவனிக்கவில்லை! உங்கள் நினைவெல்லாம், செயலெல்லாம், சொல்லெல்லாம் பாடுபட்டுத் தேடாது, பாட்டாளி மக்களது தேடி வைத்துச் சென்ற பெருஞ்செல் வத்தை நாடுவதில் கழிகின்றன. செல்வம் பெறுங்கள்; தன்னைப்போல் பிறருக்கு உணவளியுங்கள். சோம்பலை நீக்குங்கள். உறக்கம் வேண்டாம். உறங்கி உறங்கி ஊரார்

தம் பொருளையெல்லாம் உழைப்பின்றிப் பெற்று வயிறார உண்டு உணர்விழந்தது போதும்! அந்த வாழ்க்கையில் ஓராண்டு கழிந்து இன்று முடிந்தது. இனிவரும் ஆண்டிலாவது-என் ஒலி கேட்ட வேளை முதலாவது-அன்பு வாழ்க்கை உங்களிடம் மலர்வதாக! ஏழைப் பாட்டாளி மக்கள் புதுயுகம் காண்பார்களாக! அவர்தம் பொருளுண்பார் செயல் அழிவதாக!" என்று நடு நிசி மணி ஒலி ஆணை இடுகின்றது. இவ்வாணை நிறைவேறும் வரையில் உலக மெங்கணும் இன்று காணும் போர்க் குழப்பந்தான்.

> "அருந்தவே கூழும் பூண ஆடையும் வீடு மின்றி
> வருந்துவோர் எண்ணிலார்கள் மருங்குளார் அவர்க்கு அளிக்காய்
> 'விருந்திடாய் மணிமாடத்து மேவி நீ இருந்து வாழப்
> பொருந்தினுப் மனமே'

என்று மனத்துக்கு அளிக்கும் நீதி நேர்மையானதன்றோ!

அன்புளம் என்பது யாது? அன்பு என்று அனைவரும் கூக்குரலிடுகின்றனர். அன்பின் வழியது உயிர் நிலை என்றார் அறநூற் புலவர். அவ் அன்பு எங்கு ஒளிர்கிறது? எங்குச் சிறப்பது? எங்கு இனிப்பது? இறைவனை 'இன்பமே என்னுடைய அன்பே' என்று அழைக்கின்றார் மணிமொழி யார். அவ் அன்புளந்தான் யாதோ? விலை கொடுத்துப் பெறுவதோ? கடன் வாங்குவதோ? கட்டிக்குட்பட்டதோ? கண்ணுக்குக் காணக்கூடியதோ? இவற்றிற்கெல்லாம் அப் பாற்பட்டது. இவ் அன்பால் பெறக்கூடாத பொருளொன்று மில்லை. அன்பில் அனைத்தும் அடங்கும். அன்பு செலுத்த வேண்டிய இடந்தான் யாது? 'காக்கை குருவி எங்கள் சாதி, நீள்கடலும் மலையும் எங்கள் கூட்டம்' என்ற பரந்த நோக்கம் அன்பில் முகிழ்த்தது. இராமாயணக் கதை நடந்ததோ இல்லையோ, அதுபற்றி நாம் ஆராய்ச்சி செய்ய வேண்டா! அது ஒரு அன்பை விளக்கும் அருநூல். ஆண்டவன் தோற்றமெனக் கருதும் இராமன் அரச குடும் பத்தில் பிறந்தான். அன்னை ஏவலால் அருங்கான் அடைந் தான். உடன் பிறந்தான் ஒருவனுக்கு நலமளிக்கக் காடு

நடந்தான். அன்பின் முகிழ்ச்சியும் அணைத்து நின்றது. தேனும் மீனும் தின்னும் காட்டு வேடன் காட்சி தருகின்றான். 'வந்தனன் ஐய!' என்று அடிபணிந்தான். 'முன்புளம் ஒருநால்வேம் முடிவுளதென உன்னா அன்புள இனி நாம் ஓர் ஐவரும் உளரானோம்' என்றனன் இராமன். வனவேடனும் கோசலநாடனும் உடன் பிறந்தாராயினர் அன்பால். அதையும் கடந்து செல்கின்றான் இராமன். கிட்கிந்தை மலையில் சுக்கிரீவன் நட்புக் கொள்கின்றான். அவனைத் தமது உடன் தோன்றலாகக் காண்கின்றான். அன்பினாலன்றி அஃது வேறுளதோ! அதனினும் மேலான ஒரு நிலையில் இராமனை அன்பு இழுத்துச் செல்லுகின்றது. தன் மனைவியைக் கவர்ந்த கொடிய இராவணனது தம்பி, அரக்கன், மக்களினத்தால் வெறுக்கப்பட்டவன் என்று பேசப்படுபவன் வருகின்றான். பலர் தடுக்கின்றனர். எனினும் இராமனது அன்புள்ளம் அணைத்து அணையையும் தாண்டிச் செல்கின்றது. அடைக்கலம் என்ற வீபீடணனை அணைத்து நிற்கின்றது.

"குகனொடும் ஐவரானோம் முன்புபின் குன்றுசூழ்வான்
மகனொடும் அறுவரானோம் எம்முழை அன்பின்வந்த
அகனமர் காதலையா! நின்னொடும் எழுவரானோம்
புகலருங் கானந்தந்து புதல்வரால் பொலிந்தான் உந்தை"

என்று இராமன் கூறியதாகக் கம்பர் கவிதையை வாரி வீசுகின்றார். இத்தகைய அன்பே அன்பெனப்படும், இந்த அன்புளம் இருப்பின் நிற வேற்றுமை ஏது? மத வேற்றுமை ஏது? சாதி வேற்றுமை ஏது? வேறு எந்த வேற்றுமைதான் நிலைக்கும்? இந்த அன்பு வாழ்க்கை—வேற்றுமை யற்ற அன்பு வாழ்க்கை வாழவேண்டு மென்பதே அறிஞரது வேண்டுகோள்! அன்புமணியின் நோக்கமுமாம்!

இவ் வன்பு முகிழ்க்கும் இடம் எது? உளம்! ஆகவே, உளத் தூய்மை வேண்டும். உளம் தூய்மையன்றி உண்மை நிலவாது. உள்ளம் மெய்பெறின் பிற செயலும் சொல்லும் மெய்ம்மை பெறும். 'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டா

யின் வாக்கினிலே ஒளி உண்டாகும்' என்றார் பெரியார். உளத்திலே நினைப்பதொன்றும் உதட்டிலே சொல்வதொன்றுமாக உள்ள எவரும் முன்னேறமாட்டார்கள் என்பது தெய்வநெறி. 'உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்றார் இராமலிங்க அடிகள். அந்த உள்ளொளி அன்பிலே முகிழ்ப்பது. 'மலர்மிசை ஏகினான்' என்ற தொடருக்கு உரை கூற வந்த பரிமேலழகர் 'அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்து விரைந்து சேர்தலின் ஏகினான் என்று இறந்த காலத்தாற் கூறினார்' எனச் சிறப்பித்தார். எனவே உள்ளொளி பெருக்கும் அன்பிடத்தே அனைத்தையும் காணலாம். அங்கேதான் ஆண்டவன் அருளும் முகிழ்க்கும். என்று இந்த அன்பு கலந்த உள்ளொளி ஒவ்வொருவர் உள்ளத்தும் முகிழ்க்கின்றதோ, அன்று தான் போரில்லை, சீற்றமில்லை, செற்றமில்லை, தீமையுமில்லை.

இன்றைய போர் முடிந்தவுடன் புது உலகாக்க வேண்டுமென்று முன்னிற்கின்றனர் உலக அறிஞர். அவர் கூற்றுக்கள் அளவிறந்தன! அவர்கள் ஆக்கும் வழிகள் பல! ஆயினும் அவை எவ்வளவு நலம் பயக்கும் என்பது அறிஞர் உள்ளத்தை ஆராய்ச்சியில் ஈர்த்தே விடுகின்றது. வருங்கால உலகை ஆக்கும் சிலரெல்லாம் ஒருங்கு சேர்ந்து வழி கோலுகின்றனர். அவர்களது உள்ளமெல்லாம் ஒன்று சேர்ந்திருக்கின்றனவா எனில் அதில் மாறுபாடு அமையும். வருங்கால உலகை ஆக்குவதற்காக வழிகோலி மற்றோர் பெரும் போரினையே வாதிக்கின்றனர். வருங்கால உலகில் வல்லரசர்களின் பலம் மட்டும் ஒடுங்கட்டும் என வாதிடுகின்றனர். அதுபோதுங்கொல்? உலகில் மக்களெனத் தோன்றிய யாவரும் தாமும் தம் நாடும் உரிமையோடு வாழ்கின்றோம் என்ற உணர்வும், 'எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம்' என்ற அன்புள்ளமும் பெற்றவராக வேண்டும். தம்நாட்டை மற்றவருக்கு உரிமையாக்கக் கூடாதென்ற எண்ணமும், தாம் மற்ற நாட்டை அடக்கியாளலாகாது என்ற பரந்த நோக்கமும் ஒவ்வொருவர்

உள்ளத்திலும் அமைய வேண்டும். நிற வேறுபாடு ஒன்றினையே கருதி ஒருவர் பக்கலில் ஒருவர் உட்காருவதும் கூடாது என்ற மனப்பான்மை இன்றும் மனித சமூகத்தில் இருந்து வருகின்றது. இவ் வெண்ணம் இருக்கும்வரையில் போர்தான்.

வருங்கால உலகை வளமார்ந்த உலகமாக்கலாம். எப்பொழுது? அனைவருக்கும் அன்புளமிருந்தால்! தன்னாட்டையும் தன் மக்களையும் எவ்வாறு எண்ணுகிறோமோ, அது போலவே ஒவ்வொரு நாட்டையும் எண்ணி அவ்வவற்றின் கலை முதலியன வளர்ந்தோங்க அவரவர்க்குரிமையளித்து அவரவர் நாட்டை அவரவர்க்களித்து வரின் உலகில் பெரும்போர் நிகழாது நீங்கும். உலகம் யாவும் புன்னைகப் பூஞ்சோலையாகப் பொலிவுறும். அப் பூஞ்சோலையில் அனைவரும் ஒருங்கு கூடித் தோளோடு தோள்சேர்த்து உலவி வருவோம்! எந்த வேற்றுமையும் அங்குத் தலை காட்டாது! அந்நாள் வருநாள் எந்நாளோ?

அந்நாளை எதிர்நோக்க அவசியமாக அமைய வேண்டுவது கல்வி. உலகிடை ஒற்றுமை பரப்பும் கல்வி கற்பிக்கப் படவேண்டும். ஒவ்வொருவரும் தாம் தாம் உயர்ந்தவர் என்ற எண்ணமளிக்கும் கல்வி களைந்தெறியப்படல் வேண்டும். ஜெர்மானிய மக்கள் கல்விநிலை கண்டு நேற்று உலகமக்கள் கலங்கி நின்றனர். அவர்கள்தாம் ஆளப் பிறந்தவர் என்றும், மற்றவர் அடங்கப் பிறந்தவர் என்றும் கள்ளமறியாப் பிள்ளையுளத்தே தீட்டப்பெற்றதாம்! பெறுகின்றதாம்! அதன் விளைவே இன்றையபோர்! ஆகவே போர் வேண்டா என்றுபுகலும் அனைவரும் ஒன்று சேர்ந்து கல்விநிலையைத் திருத்தம் செய்தல் வேண்டும். 'ஒன்றே குலம்' என்ற உயர்ந்த நீதி புகட்டப்பெறல் வேண்டும். அவ்வந்நாட்டு உண்மை வரலாறுகள் உலகினுக்கு உணர்த்தப்படவேண்டும். மனிதர் உணவை மனிதர் பறிக்கும் கல்விநிலை களையப்படவேண்டும். உயர்ந்த அன்பு காணும் கல்வி அரும்பி மலர்வதாக!

இன்று நம் உலகிடை நடைபெறும் நிகழ்ச்சியால் இயற்கை! அன்னை நமக்கறிவுறுத்துவ தொன்றுண்டு. மண்ணொடும் கடலொடும் விண்ணொடும் விரைந்து செல்லும் படைகள் போரிடை மரித்தும், சிறந்தும் நிற்கின்ற காட்சி இயற்கைக் கோலமே அன்றி வேறென்ன? இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்துவதை விட்டு, இயற்கைப் பொருளையெல்லாம் தம் வசமாக்க வேண்டும் என்னும் பேராசை கொண்டு மக்கள் அலமருகின்றனர். அவர்களைக் கண்டு இயற்கை அன்னை நகைக்கிறாள்! ஆயிரக்கணக்கான மக்களை அன்றாடம் கொன்று குவிக்கும் போர்நிலை இயற்கை அறிவுறுத்து! "மக்காள்! செயற்கையில் செம்மாந்து போகாதீர்! இயற்கையில் ஒன்றுபடுங்கள்! இயற்கையில் இறைவனைக் காணுங்கள்! இயற்கையில் தோன்றும் எல்லாப் பொருளும் இறைவன் தோற்றமே! 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும், இலங்கும் உடல் ஆலயத்தும் அவன் 'கோயில்' என்ற வள்ளலார் வாக்கை நோக்குங்கள்!" என்பதே அவள் அறிவுறுத்து.

காவெனக் கரையும் கருத்தொலியிலும் குயிலினிலும், வானம்பாடியின் வளமார் இசையிலும், கடலொலியிலும் கருத்திருத்தி இனிய இன்பத்தைக் கண்டு மகிழ்வதை விட்டு, 'மோட்டார்' வண்டிகளின் முழக்கொலியிலும், குண்டுகளின் வெடி ஒலியிலும், 'டாங்கி'களின் கடமொலியிலும் நம் காதுகள் கருத்தைச் செலுத்துகின்றன. ஆகவே இயற்கை அன்னையின் சீற்றம் அக்கொடிய பொருள்கள் மூலமே ஆட்சி செலுத்துகின்றது. இன்று அழிவின்மை நாடு பெரியதன்று; ஆனால் மக்களை அதிகமாகக் கொன்று குவித்து அப்பிணக் குவியலின்மேல் கட்டப்படும் நாடே பெரிய நாடு! நாகரிகமிக்க நாடு அது! ஆம்! நாகரிகம் என்னும் போது உள்ளம் நடுங்குகின்றது! இன்றைய நாகரிகம் எது? இயற்கையோடு கூடிய எழில் முகங்களைச் செயற்கைகளால் மறைப்பது! உழைத்து உண்ணவேண்டிய வழிவிட்டு உறங்கி உண்பது! அறம் வளர்த்து உயிர் புரக்கும் நெறிவிட்டு மறம் வளர்த்து மக்களைக் கொன்று குவிப்பது! இவை

செயற்கைக் கோலம். இக்கோலமெல்லாம் அழிந்து இயற்கை அன்னை நடமாடும் நன்றுளே பொன்னுள்! அந்நாள் நலம் புரக்கும் இந்நாள்! இச் செயற்கை வெம்மையெல்லாம் இயற்கையில் சென்று முடியத்தான் வேண்டும்! அந்நாளை வேண்டுமாறு இம் மணி ஒலி வற்புறுத்துகின்றது. அடுத்துவரும் நடுநிசி நல் ஒலி 'அமைதி' பெற்றுவருவதாக!

உலகமெல்லாம் உழன்று ஓடினேன். பல்லோர் வாழ் உலகமெல்லாம் பறந்து நின்றேன். என் உள்ளத்தை நான் காணவில்லையே! அன்பு மணியே! உனக்குக் காரணமாய இயேசு பெருமான் அருளிய பொன் மொழியை மறந்தேன் கொல்! உன் கண்ணிலிருக்கும் பெரும் பொருள் மறந்து அயலவன் கண்ணிலுள்ள சிறு துரும்பைக் காண்பதென்னே? என்ற கேள்விக்கு நான் என்ன பதில் இறுப்பேன். என் உள்ளம் பேயும் பிறவும் புகலிடம் கொண்டதாயிற்றே! தாயுமானவர் போன்ற பெரியோர்களெல்லாம் குணக்கேடர்கட்கு இலக்கணம் எழுதிச் சென்றார்கள்! நான் இலக்கியமாகி நிற்கின்றேன்.

இவ்வாறு இத்தனை குணங்கெட்ட நான் மேலே கண்டவற்றையெல்லாம் கூற உரிமை பெற்றவனல்லேன் என எண்ணும்போது உளம் நடுங்குகின்றது. என் செவியிலும் அறிவூட்டும் மணி யொலி கேட்கின்றது. உன் அருளை வேட்கின்றேன். ஆனல், உளம் மாசு படிந்துள்ளது! மாசு அகற்ற மனமிருக்கிறது; வழி இருக்கிறது. பற்ற ஒருப்படவில்லை. இறையே! உன் விளையாட்டுக்களில் இதுவும் ஒன்று!

என்று உலகிடைப் பிறந்தேனே அன்றே ஆணவம் ஆழ்ந்தது! உலகிடையே தாழ்ந்த தன்மையன் யார் என்ற கேள்விக்கு 'நான் தான்' என்று தட்டாது விடையிறுக்கலாமன்றோ? இச்செயல் நீயறிவாய். 'வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள் ஐந்தும் அகத்தேநகும்' என்ற வள்ளுவர் வாக்கின்படி என் உளம் ஐம்பூத நகைப்பிற்கு இடனுக உள்ளது. இறையே உனது படைப்பில் எத்

தனையோ வகை உள்ளன! 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்றார் மணிமொழியார். உலகில் உன் படைப்பில் உதித்த ஒருவனைத் தீயவன் என்று அழைக்க நான் யார்? ஒருவனைக் கொடியவன் என்று கூற என் நாவிற்கு என்ன உரிமையுண்டு? எல்லாம் உன் செயல். உன் சொல். 'எனது மனமெனு மோர் பேய்க்குரங்கு அலைப்பற்றி நிற்கின்றது.

'குரங்குமாய் நண்டுகட்டித் தேளும் கொட்டிக்
குடியாத மதுக் குடித்துப் பேயுமுற்று
இரங்கவரு காஞ்சொறியின் பொடியும் பூசி
இஞ்சிதின்று கொள்ளிபிடித் தெழுந்த மனம்'

மனம் பலபொருள்களை நாடிப் பறந்து, பற்றுவது ஒன்றுமின்றி வறிதே கழிகின்றது. எனக்கு நலம் செய்வார் யார்? அவலம் செய்வார் யார்? ஒருவரும் இலர். எல்லாம் உன்னருளால் வருவதென் றெண்ணியிருக்குமாறு அருளைப்புரிவாய்! எனக்கு இழைப்பவற்றையெல்லாம் நன்மையெனக்கொள்ள மனம் தருவாய்! பகைவனுக்கருள்வாய் என்ற பாரதியார் வேண்டுகோள் என் உள்ளத்திலும் உதிக்க வேண்டுவல்! 'திறனல்ல தற்பிறர் செய்யினும் நொந்து அறனல்ல செய்யாமை நன்று' என்ற வள்ளுவர் வாய்மொழியை உள்ளிடச் செய்வாய்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர்தர வாரா'

என்ற புறநானூற்று அடிகளில் புத்தியைச் செலுத்த நல்லறிவு கொளுத்துவாய். 'நாமார்க்கும் குடியல்லோம் யாது மஞ்சோம்' என்ற வீர வாழ்வில் ஊக்குவாய்!

என் வாழ்நாள் கழிந்து கொண்டே செல்கின்றது. வாழ்நாளில் செய்யவேண்டிய பணி யாது? சிறக்கவேண்டிய வழி யாது? உய்யவேண்டிய முறை யாது? உயரவேண்டிய வழி யாது? இயற்கையில் இலங்கி யாண்டும் நீக்கமற நிறைந்து, எல்லா உயிர்களையும் ஆக்குவிக்கும் அம்மையப்பராய் அமர்ந்து, உலக மக்களாகிய குழவிகள் உய்ந்து நலம் பெறும்படி நல்லறிவு கொளுத்தும் ஞானச் செல்வமே!

ஆண்டின் முதல் நாளில் உன்முன் நிற்கின்றேன். செய்ய வேண்டுவதறியாது திகைக்கின்றேன். உலகமோ துன்பப் பெருங்கடலுள் சூழ்ந்து திகைக்கிறது. புது ஆண்டு நலமாகச் சிறக்க என வாழ்த்தவேண்டிய நெறி போய், வரும் ஆண்டில் போர்வீரர் எல்லா வீரத்தையும் காட்டி வெற்றி பெறுக என வாழ்த்த வேண்டியதாக உள்ளது. அன்பின் அறிகுறிக்கென அமைந்த நாளில் வன்பில் மனமியற்ற வேண்டியுள்ளது! செய்வதிதுவெனத் திகைக்க வேண்டியுள்ளது. உன் தண்டணிகை மலைக்குன்றில் இன்று வந்து நிற்கின்றேன். அடியாரெல்லாம் வந்தார்கள்! உன்புகழை வாயாரப் பாடியுள்ளார்கள்! பாடுகிறார்கள்!

'வணங்கத் தலைவைத்து வார்கழல் வாய்வாழ்த்த வைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்த'

இறையே! உன்னைப் பரவுகின்றார்கள். இன்பத்தும் துன்பத்தும் எப்பொழுதும் உனை எண்ணவேண்டும் என்ற எண்ணம் வேண்டும்.

'அப்பாநான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத நிலைமையும் வேண்டுவனே'

என்ற வள்ளலார் வேண்டுகோளைத் தங்கள் திருமுன் வைக்கின்றேன். 'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க் கிங்கே என்றருள் செய்யும்' உன் உயர்ந்த தன்மை எண்ணி உளம் உவக்கின்றேன். அடியேன் செய்த பிழைகள் அளவில! அறியாது செய்தன சிலவாகும்; அறிந்து செய்தன பல. இவை உன் திருவுளமறியும். அப்பிழைகளை மறுமுறை மனதிலும் எண்ணுதிருக்கும் வகையில் உன் அருள் கூடவேண்டும். உன் படைப்பில் உள்ள எல்லாப் பொருளும் எல்லா மக்களும் என் நலத்திற்கே உழைக்கின்றனர் என்ற எண்ணம் என் மனத்தே முகிழ்த்தல்

வேண்டும். அவர்கள் எது செய்யினும் அவை எல்லாம் நான் நலம் பெறவே எனக் கருதல் வேண்டும். வேண்டும் என்று பல வேண்டலாம். ஆனால், வேண்டுவதெல்லாம் நீ அறியாதனவோ?

> "வேண்டத்தக்க தறிவோய்நீ வேண்ட முழுதும் தருவோய்நீ
> வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி என்னைப் பணிகொண்டாய்"

என்ற அடியவர்தம் அடியினை நினைவு கூர்கின்றேன். எந் தாய்! என்னை அடித்தது போதும், அணைத்திடல் வேண்டும் என அழைக்கின்றேன். 'களிப்பெலாம் மிகக் கலங்கிடுகின்றேன்' 'துன்பிடை இன்பம் உண்டு' என்ற மொழிகளை நோக்குகின்றேன்.

பல்லுலகும் பல உயிரும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர் எல்லையறு பரம்பொருளாய் இலங்கும் இறையோனே! நடு நிசி மணி ஒலியில் இருந்து கிளம்பிய என் இதய ஒலி உன்முன் ஒலிக்கிறது. நீ என் தந்தையாதலின்-தாயாதலின் இதுவரையில் செய்த பிழையெலாம் பொறுத்து, மணி ஒலியை என்பகைப்பிணி ஒழி ஒலியாக அமைத்து, அடுத்துவரும் நடு நிசி மணி ஒலியில் உலகமெலாம் அமைதி நிலவும் வண்ணம் செய்வாய்!

> "யாம் இரப்பவை
> பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
> அருளும் அன்பும் அறனும் மூன்றும்
> உருள் இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!"

என்ற எனது பழந்தமிழ்ப் பாட்டனாரது வேண்டுகோளை உன் திருமுன் செலுத்தி என்மன அலைகளின் வேகத்தை நிறுத்திக் கொள்ளுகின்றேன். தோன்றும் ஆண்டு தூய தாய் அமைக! யாண்டும் இன்பம் இயைக!!

# பண்டைத் தமிழர் அரசியல்

தற்போது நாம் தங்கி வாழும் தமிழகம் பண்டைக் காலத்தில் மிகப் பரந்த நிலப் பரப்பை உடையதாகப் பரிணமித்து விளங்கிற்று. இமயம் நீரிடை நிலவிய காலத்தே நம் தமிழ்நாடு கிழக்கே ஆஸ்திரேலியா வரையிலும், மேற்கே மெடகாஸ்கர் தீவுவரையிலும் பரவி இருந்ததாகப் பல ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அக்காலத்தில் தற்போதுள்ள இந்துமகா சமுத்திரம் ஒரு பெரிய நிலப்பரப்பாக நிலவியதெனவும் அந்நிலப்பரப்பில் வளஞ்சான்ற குமரி முதலிய கோடு முடிகளும், பஃறுளி முதலிய வற்றாப் பெரு நதிகளும் சிறந்து விளங்கின என்றும் நாம் அறிகின்றோம். பல்வேறு ஊழிகளுக்கிடையே பண்டைநிலப் பரப்பைக் கடல் கொண்டது என்பது சிலப்பதிகார அடிகளாலும், பிற ஆராய்ச்சிகளாலும் நன்கு அறிந்து கொள்ளப் படுகிறது.

இவ்வாறு பரந்து கிடந்த தமிழ்நாட்டை ஆண்ட பல்வேறு தமிழ் அரசர்களது சரித்திரங்கள் சரியாகக் கிடைத்தில. புறநானூறு முதலிய சில நூல்களிலிருந்து இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னிருந்த அரசர்களது அரசியல் நிலையை ஒருவாறு அறுதியிட்டுக் கூற நமக்குச் சிறிதே வாய்ப்பு ஏற்பட்டிருக்கின்றது. அதைப் பற்றி ஒரு சிறிது ஆய்வதே இக் கட்டுரை எழுதுவதன் நோக்கம் ஆகும்.

பண்டைக்காலத்தே நம் தமிழ் நாடு சேர சோழ பாண்டியர் என்ற முடியுடை வேந்தர் மூவரால் அரசாளப் பட்டு வந்தது. இவர்களுள் பாண்டியர் தெற்கேயுள்ள மதுரையிலும், சேரர் மேற்கே யுள்ள வஞ்சியிலும், சோழர்

கிழக்கேயுள்ள புகாரிலும் தங்கி அரசாண்டனர். இவர் களையன்றி இவர்கட்குக் கீழ்ப்பட்ட பல சிற்றரசர்களும் ஆண்டுவந்தனர் என்பது நன்கு அறியக்கிடக்கின்றது.

இவ்வாறு அரசாண்ட அரசர்கள் தம் அவைக் களத்தை எவ்வாறு அமைத்து அரசு செலுத்தி வந்தனர் என்பது முதலில் ஆராய வேண்டுவதாகும். ஐம்பெருங் குழு, எண்பேராயம் என இருவகைக் குழுவினர் அவ்வரசர் அவையில் அமர்ந்திருந்து அறமுரைத்தனர் என அறிகின் றோம்.

'சாந்துபூக் கச்சடை பாக்கிலை கஞ்சுக நெய்
ஆய்ந்தஇவர் எண்மர் ஆயத்தார்
மாசனம்பார்ப் பார்மருத்தர் வாழ்நிமித்த ரோடமைச்சர்
ஆசில் அவைக்களத்தார் ஐந்து'

என்ற வெண்பா இவைகளை வலியுறுத்தும். இவற்றுள் மாசனம் என்பது தற்காலத்து இருக்கும் சட்டசபைகளை ஒத்ததாகும். பல்வேறு பிரிவுகளில் உள்ள நாட்டு மக்கள் தம் தம் தொகுதிக்கு ஒருவரை அமைத்து அரசவையில் தங்கித் தம் குறைகளை விரிக்குமாறு அனுப்பி இருந்தனர். அவர்களே மாசனம் (Representatives) எனப்படுவர். மற்றும் இன்று மேனாட்டில் உள்ள பார்ப்பனரைப் போன் றவர் (Priests) அக்காலத்து நம் நாட்டு அரச சபைகளில் அரசருடனிருந்து உறுதி உரைத்து வந்தனர். இவர்களைத் தவிர மருத்துவரும் (Doctors) நிமித்தரும் (Astrologers,) அமைச்சரும் (Ministers) அரசர் அவைக் களத்திருந்து அரசியலைத் திறம்பட நடத்தினர் என்பது கண்கூடு.

மேலே கண்ட பல்வகைக் குழுக்களோடு அரசன் அர சியலை நிர்வகிக்கும்போதும் தானே நேரில் எல்லாக்காரி யங்களையும் கவனித்து வருவது வழக்கமாயிருந்தது. பொற் கைப்பாண்டியன், மனுநீதிச் சோழன் முதலியவர் தம்கவின் பெறு செயல்கள் இதற்கு ஏற்ற சான்றுகளாகும். தவிர,

'காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்'

என்று வள்ளுவர் கூறுவதால் அரசியலின் தன்மை நன்கு விளங்கும். மன்னவன் மற்ற மக்களுக்கு அவர்கள் குறைகளைக் கேட்டுக் கோபம் கொள்ளாமல் இன்முகத்தோடு, நன் மொழி கூறி அவர்களை அனுப்பவேண்டும். அன்றேல் அவன் ஆட்சி நிலையுறாது. அரசனானவன் தன் குடிகளில் யாராயினும், எத்தகைய கொடுமையை இழைத்த காலத்தும் மாறுபாடின்றி ஒத்த நோக்குடன் இருந்து நியாயம் செலுத்த வேண்டும். இளங்கன்று வீழ்ந்து இறந்து பட்டதற்கு ஆற்றாளுய் மனுச்சோழன் அவ்விறத்தலுக்குக் காரணமாய தன் சொந்த மகனையே அக்கன்று இறந்த முறையிலேயே தண்டித்து முறை செய்தான்.

'வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்'

என்று அவன் புகழப்படுகின்றான். மற்றும், கோவலனைக் கொலைசெய்த பாண்டியன் நெடுஞ்செழியன் தான் உண்மைக் கள்வனைக் கொல்லவில்லை எனக் கண்ணகியின் காற்சிலம்பால் உணர்ந்த பிறகு,

"தாழ்ந்த குடையன் தளர்ந்த செங்கோலன்
பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்கும் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகஎன் ஆயுள்"

என மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான். இவைகளினால் தமிழ்நாட்டு மன்னர்கள் குற்றம் செய்தோர் யாவராயினும் தண்டிக்கும் தன்மை வாய்ந்தவர் என்பதும், தம்மிடைக் குற்றம் கண்டுழி மயங்காது உலகுக்கு வெளிக்காட்டி உற்ற தண்டனையைப் பெற்றனர் என்பதும் நன்றாகப் பெறப் படுகின்றது.

தமிழ்நாட்டு அரசர்கள் போர்முனைக்குச் செல்வதைப் பற்றித் தொல்காப்பியப் புறத்திணை இயல் மிக விரிவாக விளக்கிக் காட்டி இருக்கின்றது. அதனை ஈண்டு விரிப்பிற்

பெருகும். இரண்டொன்றை மாத்திரம் விளக்கிச் செல்வோம்.

ஓர் அரசன் பிறநாட்டவன்மேல் மண் முதலியன வேட்டுப் படை கொள்ளுவானாயின் அவன் அறப்போர் முறையைக் கைக்கொள்ள வேண்டும். போர் தொடங்கு முன், எச்சரித்து அன்றித் தொடங்கலாகாது.

'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடனிறுக்கும்
பொன்போற் புதல்வரைப் பெறாஅதீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்'

என அறத்தாறு உரைத்து, அவர்கட்கு அறிக்கை யூட்டிச் சின்னாள் கழித்துப் போர்தொடங்குவர். அப்போரிடையில் தத்தம் மரபிற்கும் முறைக்கும் ஏற்ற வகையில் போர்ப் பூவை அணிந்து புகழுறுவர்.

நியாயத் தீர்ப்பு முறையில் பண்டைத் தமிழ் அரசர் சற்றும் இளைத்தவரல்லர் என்பதைக் கண்டோம். 'குலவிச்சை கல்லாமல் பாகம் படும்' என்ற மொழிக்கு இலக்காக உள்ள சோழன் கரிகாலனது அரசியல் முறையைக் காணின் பல்வேறு உண்மைகள் விளங்கும். கரிகாலன் இளமைப் பருவத்தே அரசு வீற்றிருக்கையில் இருமுதியவர் தம் வழக்கை எடுத்துரைக்க அவை எய்தினர். அங்கு அரசன் இளையன் என்பதைக் கேள்வியுற்றுத் தயங்கினர். அப்போது சோழன் கரிகாலன் நரை முடித்து நன் முடிவு செய்து வழக்கை முடித்தான். இதை,

'உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப-நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும்'

என்ற பழமொழி வெண்பா விளக்குகின்றது. இதனால் தமிழரசரது தலையாய முறைசெயலும் போற்றப்படுகிறது.

நிற்க, அரசர்கள் தம் தலைவியர்களை வேளாண் மரபில் தேர்ந்தெடுத்துக்கொண்டதாக அறிகின்றோம். அழுந்தூர் வேண்மாள் என்ற பெண்ணைக் கரிகாலன் விரும்பி மணந்ததாகவும் சான்றுள்ளது. அவர் ஓர் வேளாளத் தலைவரது மகளாவர். அரசனது அவைக்களத்து அற முறைக்கும் ஆற்றல் வாய்ந்தவராய் அரசியரும் உடன் தங்கி இருந்தனரென்பதும் நம் தமிழ் நாட்டில் நடந்த ஓர் செயலாகும். பாண்டியன் நெடுஞ்செழியன் தன் தவறு உணர்ந்த காலத்து வீழ்ந்து உயிர்விட, அதைக்கண்டு அவனது அருகிலிருந்த கோப்பெருந்தேவி உடன் உயிர் விட்டனள் என்றும், சேரன் செங்குட்டுவன் மலைவளங் காணச்சென்ற பொழுது, பத்தினிதேவிக்குக் கோயில் எடுக்க ஏற்பாடு செய்ய, உடன் உயிர் விட்ட பாண்டியன் கோப்பெருந் தேவிக்கோ, அன்றிக் கண்ணகிக்கோ கோயில் எடுப்பது என்று ஐயந்தோன்ற, உடன் நின்ற கோப்பெருந்தேவி கணவனுடன் உயிர் நீங்கிய பாண்டியன் தேவி கற்பிற் சிறந்தவளாயினும், தம் நாடு வந்து மலை ஏறிச் சென்ற கண்ணகிக்கே தாம் கோவில் அமைக்கவேண்டும், எனக்கூறினள் என்றும் சிலப்பதிகாரம் செப்புகின்றது. ஆகவே, அரசியல், அரசியின் அற வுரைகளோடும் நடை பெற்றது என நாம் நன்கு அறிகின்றோம்.

பண்டைத் தமிழ் அரசர்கள் நாட்டு மக்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்து வந்தனர். சோழன் கரிகாலன் காலத்தே இருந்த காடுகளெல்லாம் நாடுகளாக்கப்பெற்றன.

'காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கி'

என்ற பட்டினப்பாலை அடிகளால், அரசன் மக்களுக்குக் காட்டை அழித்து நாடாக்கித் தந்தனனென்றும், ஏரி குளம் முதலியவைகளைத் தோண்டி நாட்டு வளத்தைச் செழித்தோங்கச் செய்தான் என்றும் அறிகின்றோம்.

எத்துறையிலும் தமிழ் அரசர்கள் ஏற்றமுற்றது போன்று வாணிபம், கல்வி, சிற்பம், தாய்மொழி முதலியவற்றை வளர்ப்பதிலும் முன் நின்றார்கள் என்பதும் நாம் அறிந்ததேயாம். பட்டினப்பாலையில் காவிரிப்பூம்பட்டினத்தில் நடந்த வியாபாரத் தன்மையும், மதுரைக் காஞ்சியில் மதுரையில் நடந்த வியாபாரத்தன்மையும் நன்றாக விளக்கப் பட்டுள்ளன.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு"

என்று புகார் நகரின் வாணிப நலம் பட்டினப்பாலையில் போற்றப்படுகின்றது. அதேபோல மதுரைக்காஞ்சியிலும் பல அடிகள் உள்ளன.

[illegible], தமிழ் மொழியை அவர்கள் போற்றி வளர்த்த தன்மையைச் சிறிது நோக்குவாம். அரசர் குலத்துப் பிறந்ததனால் இன்பமே பெரிதாக மதித்து வாழும் மடமை அவர்களிடம் கிடையாது. செந்தமிழ்நாட்டு அரசர், தம் தமிழ்மொழியை உயிர்போல் ஓம்பி வந்தனர். மதுரைப் பாண்டியர் தம் தலைநகரத்தே உயர்ந்த சங்கம் அமைத்து அதைப் புரந்து வந்தனர். சோழன் கரிகாலன் தன்னைத் தண்டமிழில் பாடிய உருத்திரங்கண்ணனாருக்குப் பதினாயிரம் பொன் பரிசளித்தான்.

'தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்
பத்தொடாறு நூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்'

என்ற கலிங்கத்துப்பரணி அடிகள் அதை வலியுறுத்தும். சேரன் செங்குட்டுவன் தம்பியாகிய இளங்கோவடிகள் தாமே சிறந்த புலவராயிருந்து சிலப்பதிகாரம் என்னும் நூலையாத்தனர். இவர்களைத் தவிர மற்றுமுள்ள சிற்றரசர்கள் யாவரும் தமிழ்மொழியைப் பொன்போல் போற்றிப் புலவர்களுக்குப் பொன்னும் மணியும் வாரிக் கொடுத்ததோடு தம்உயிரையும் கொடுக்கத் துணிந்தனர்.

'அந்தநாள் வந்திலை அருங்கவிப் புலவோய்
இந்தநாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய்
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்து
விலைதனைப் பெற்றுன் வறுமைநோய் களையே'

என்ற குமண அரசனது வாக்கு அவரது தமிழ்மொழியின் ஆர்வத்தையும் கொடைத் திறத்தையும் நன்கு புலப்படுத்தும்.

ஆகவே பழந் தமிழ்நாட்டு மன்னரது அரசியல் நிலைகளும், முறைகளும், இன்ன தன்மைத் தென விளங்குகின்றன. விரிக்கிற் பெருகும். தமிழ் நாட்டரசரது சிறந்த அறத்தன்மை வாய்ந்த அரசியல் முறைமையும், குடிமக்களுக்குச் செய்த நன்மையும், வாணிபமும், பிறவும் இதனால் அறிக! பண்டைத் தமிழர் அரசியல் ஓங்குக!

# யற்கைச் செல்வம்

கதிரவன் நாள்தோறும் தோன்றுகின்றான். கதிரவன் ஒளி படாத இடம் இல்லை. கதிரவனைக் காணாத கண் இல்லை. ஆம் இது அன்றாட நிகழ்ச்சி; இதில் வியப்பில்லை. யாருக்கு? நம்போன்ற மக்களுக்கு! ஒளி விடும் ஞாயிறும், தண்ணொளிபரப்பும் திங்களும், பிற இயற்கைப் பொருள்களும் தம்தம் நிகழ்ச்சிகளை - செயல்களை - சலியா வகையில் ஆற்றிவருகின்றன. யார் பொருட்டு? நம் பொருட்டென்றே சொல்லலாம்.

நம்மைச் சுற்றி எங்கு நோக்கினும் இயற்கை இறைவன் தாண்டவ மாடுகின்றான். அவன் தாண்டவத்தைக் கண்கொண்டு நோக்குவார் ஒருசிலரே! கருத்தூன்றிப் பார்ப்பார் மிகச் சிலரே! பண் ஒன்றப் பாடுவார் மிகச் சிலரே! அவற்றின் பலனைப் பெறுபவர் அவரினும் சிலரே! நாள்தோறும் நடைபெறும் கதிரவன் தோற்றத்தினும் பிறவற்றினும் என்ன சிறப்பு என்று நாம் எண்ணலாம். ஆனல் ஒருகவி-வெளியுலகில் சஞ்சரிக்கும் கவி-தன் இன்பம் எல்லாம், செல்வமெல்லாம் அந்த இயற்கை அன்னையின் மடியில் உள்ள தென்று எண்ணுகிறான். எண்ணி அந்த இன்பத்தை உள்முருக், உயிர் உருக, உணர்வு உருக அனுபவிக்கின்றான். அவன் கருத்திடைக் கொண்ட மட்டற்ற இன்பினை - கண்ணிடைக்கண்ட காட்சியை 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற தாராள நோக்குடன் கவியாக வெளியிடுகின்றான். கவியின் உளத்தில் களங்கமில்லை. அவன் உள்ளம் அனைத்தினும் மேலானது; தூய்மையானதுங் கூட அத்தகைய தூய உள்ளத்திலிருந்து கவிதை வெள்ளம் புறப்படுகின்றது. அந்த வெள்ளத்தில் மூழ்கினவர்தாம் அந்தக்

கவி இன்பத்தினை அனுபவிப்பர். மற்றோர் தாம்இழக்கும் பொருள் இன்பத்தினை அனுபவிப்பார்.

ஆங்கிலக்கவிஞன் ஒருவன் மாலை வேளையில் மேற்கு நோக்கிய பலகணியருகில் உட்கார்ந்திருக்கின்றான். இரு நண்பர்-கவிநலம் கண்ட நண்பர்-உடன் பேசிக்கொண் டிருக்கின்றனர். கதிரவன் பொற்கதிர் காட்டிப் புனலிடை மறைகிறான். 'ஆ! எவ்வளவு அழகாயிருக்கிறது இக்கதிர்க் காட்சி' என்று வாயாரப் போற்றுகின்றான் கவிஞன். 'இக்கவிஞர் இயற்கையை எக்கண்கொண்டு பார்க்கிறார் களோ!' என்று அருகி லுள்ளவர் வியப்புறுகின்றனர். உண்மைதான். கவிஞர் கண்கள் தனிக்கண்களே. அக்கண் களில் கள்ளமில்லை—வஞ்சகமில்லை—ஏமாற்றமில்லை—மருட் சியுமில்லை. அக்கண்கள் நிலைத்த இயற்கையைக் காண் கின்றன. இன்பப் புணரியில் அக்கவிஞனை ஆழ்த்து கின்றன.

இயற்கை இன்பத்தினைப் பருகும் கவியின் கண்களுக்கு ஐயாயிரம் கல்தொலைவு கடல் கடக்கவேண்டுவதில்லை. நம் தண்டமிழ்நாட்டு இயற்கையைக் கண்ட கவிகளின் கண் கள் நம்முன் காட்சி தருகின்றன. இயற்கையைக்கண்ட கவிகள் அவ்வியற்கையோடு வாழ்க்கைக்குரிய நலன் களைப் புகுத்தி நமக்கு வழங்கியிருக்கும் நாவினிக்கும் பாடல்கள் என்றும் நினைக்கற்பாலனவாம்.

கம்பர் தருங்காட்சி நம்கண்ணைவிட்டு என்றும் அக லாது. அவரது இராமாயணத்தில் இயற்கைச் செல்வம் நிறைந்து கிடக்கிறது, அவ்வியற்கைச் செல்வத்தைக் கருத்தூன்றக் கண்டவர் சேர்த்து வைப்பர். அல்லார் அதையறியார். ஒருநாள் மாலைப்பொழுதில் மறைந்த ஞாயிறு மறுநாட் காலையில் தோன்றுகின்றது. இது நாள் தோறும் நடைபெறுகின்ற நிகழ்ச்சி தான். அது கண்டு நம் உள்ளத்தில் ஒன்றும் புதுமை தோன்றவில்லை. அது வும் இன்றைய ஆராய்ச்சியுலகில் உலகம் சுற்றுவதால் நடைபெறுவது இந்நிகழ்ச்சி என்பதை நாம் அறிவோம்.

கம்பர், அந்த மறைந்து தோன்றும் காட்சியில் ஓர் உயர்ந்த உண்மையைக் கண்டார். அவரது கவிதையொன்று அவ்வுண்மையைப்பற்றி ஓடி வருகின்றது.

துறக்கமே முதல வாய தாபர யாவை யேனும்
மறக்குமா நினையல் அம்மா வரம்பில தோற்ற மாக்கள்
இறக்குமா றிதுவென்பான் போல் முன்னோரான் இறந்தான் பின்னாள்
பிறக்குமா றிதுவென் பான்போல் பிறந்தனன் பிறவா வெய்யோன்.

இந்த நான்கு அடிகளில் எத்தனையா உண்மைகள்! இன்று ஆராய்ச்சியிற்கண்ட உண்மைகூட அங்கு ஒளிர்கின்றது. சூரியன் முளைப்பதும் இல்லை, மறைவதும் இல்லை; எல்லாம் உலகச் சுழற்சியால் நடைபெறுவது என்ற உண்மையைப் 'பிறவா வெய்யோன்' என்ற சொற்களில் அடக்கிவிட்டார் கம்பர். மற்றும் நம் நிலையற்ற வாழ்வினைக் கதிரவனது தோற்றமறைவிடைக் கலந்து மெய் உணர்வினை வாரி நமக்கு வழங்கிய நீதி சாலவும் பெரிதன்றோ!

திங்கள் நாள்தோறும் வளர்கின்றன். நிறைமதியானவுடன் குறைகின்றன். இது திங்கள் தோறும் நடைபெறும் நிகழ்ச்சி. பலகோடி கண்கள் பார்த்த-பார்க்கிற நிகழ்ச்சி இது. இதில் உள்ள உயர்வு யாது? ஒன்றுமில்லை. ஆனல், கவிகண்டான். பெரிய உண்மையை அதிலே உணர்ந்தான். நமக்கெல்லாம் அவ்வுண்மையை உணர்த்துகின்றன்.

'தேய்த வுண்மையும் பெருக வுண்மையும்
மாய்த வுண்மையும் பிறந்த வுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டிச்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகம்'

என்பன அவன் வாயிலிருந்து வந்த வாடா மலர்கள்.

பைம்பயிர் உழவன் கைவருந்தி உழைக்கின்றன். கதிரவன் கிரணங்கள் காயினும் விடா முயற்சியின் பயனுக வரண்ட வெற்று நிலத்தில் திரண்ட பசுமையைத் தீட்டுகிறன். கரடு முரடாயிருந்த தரிசில் நிலம் விதையிடப் பக்குவப் படுத்தப்படுகின்றது. அதில் விதையினையும் வீசுகின்

ருன். அவன் மனம் மகிழ இட்ட விதைகளெல்லாம் கிளைத்துக் கிளம்புகின்றன. நீர்விட்டு நேரிதெனப் பார்த்துப் பசுங் குழந்தை எனப் பைங்கூழை வளர்க்கின்ருன். தன்னை வளர்த்தவனை மகிழ்விக்க வண்பயிர் தலைநிமிர்ந்து வளர் கின்றது. கதிர் விட்டுக் காய்க்கின்றது; முற்றுகின்றது. அவற்றைத் தன் களத்தில் சேர்க்கின்ருன் வயற்கிழவன். அத்தகைய பயிர் அளிக்கும் நெல்லினை அரிசியாக்கி அனைவரும் வயிறு நிரப்புகின்ருேம். நாம் வாழ்வதே அதனுல் தான். வளரும் பயிரினையும், வயிற்றுட் செல்லும் சோற்றினையும் நாம் பல முறை கண்கொண்டு காண் கிருேம். ஆனுல், நாம் அவற்ருல் பெற்ற இன்பம் யாது? பசிதீர வாழ்வதொன்றே என எண்ணுகின்ருேம். கவி யுளம் படைத்த கற்றவன் ஒருவன் அதே பயிரைக்காண் கின்ருன். அசைந்தாடும் பயிர் அவனுக்கு ஆயிரக்கணக் கான அறிவுச்சுடர்களை அள்ளி வழங்குகின்றது. உளத்தில் உணர்ந்தான். உணர்ச்சி வெள்ளம் மடையுடைத்து வாக் கிடை வழிகின்றது. அவற்றைத் திரட்டித் தருகின்ருன்.

'சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம் போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்த்த நூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே'

எத்தனை உண்மைகள் இச்சிறு அடிகளிலே! இவற்றை எண்ண எண்ண இன்ப ஊற்றல்லவோ எழும்புகின்றது. இக்கவியுளம் படைத்த கற்றவர் அன்றும் இன்றும் என்றும் உள்ளனர். அவர் வழி உலகம் ஓடுகிறது.

காழியில் தோன்றிய தெய்வக்குழந்தை திருஞானசம் பந்தர். அவர் தலங்கடோறும் சென்று இறைவனைப் பாடி னர். பண்ணெனன்றப் பாட்டிசைத்தார். இளமை உள் ளத்தே இயற்கையின் எழிலும் புகுந்தது. ஆண்டவனைக் காணும் இடங்கள்தோறும் தோன்றும் இயற்கையெல்லாம் ஆண்டவனெடு பின்னிக் கிடப்பதாக அவர் உள்ளத்தே தோன்றின. தாம் கண்ட இயற்கைச் செல்வத்தை எழிற்

செல்வனாகிய ஆண்டவனோடு இணைத்துப் பாடுகின்றார். குரங்குகள் குதிப்பதும், மயில்கள் ஆடுவதும், பிறவும் அனைவரும் காண்கின்ற காட்சிகள் தாம். ஆனால், கல் உளமாகிய நம் உளத்தே, அவை கனிந்த காட்சி தருவதில்லை. கனியுளம் பூண்ட சம்பந்தர் அவற்றைக் கனிவு கொண்டு பாடுகின்றார்.

திருவையாற்றின் அருகில் செல்லுகின்றது தெய்வக் குழந்தை. அங்கு அலமந்தபோது அஞ்சலென்றருள் செய்யும் அம்மையப்பர் அழகுடன் காட்சியளிக்கின்றார். அக்காட்சியுடன் இயற்கைக் காட்சி கலந்து இலங்குகின்றது. ஆண்டவனைப்பாடிய அந்தவாய், இயற்கைச் செல்வத்தையும் வாழ்த்துகின்றது. திருவையாற்றுச் சிறப்பெல்லாம் இயற்கை இறைவனிடம் அடைக்கலம் பெற்றுள்ளன. சம்பந்தரது பத்துப்பாடல்களிலும் இயற்கைவளம் மிக்குக் கிடக்கின்றது. அவற்றுள் ஒன்றிரண்டு கண்டு அறிவோம்.

'மான்பாய வயலருகே மரமேறி மந்திபாய் மடுக்கள் தோறும்
தேன்பாய மீன்பாய்ச் செழுங்கமல மொட்டலரும் திருவையாறே'

என்பதும்,

'குன்றெலாம் குயில்கூவக் கொழும்பிரச மலர்பாய்ந்து வாசமல்கும்
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு கண்வளரும் திருவையாறே'

என்பதும், அறிஞர்கள் அறிந்து இன்புறத் தக்கன.

காளத்தி மலையினைக் காணச் செல்லுகின்றார் சம்பந்தர். அங்குள்ள கருமந்திகள் மலையிடை மகிழ்ந்து விளையாடுகின்றன. கள்ளங்கொள்ளாப் பிள்ளையுள்ளத்தே அக்காட்சி அப்படியே படிகின்றது. தேவாரப் பாட்டிசைக்கின்றார்.

'வல்லைவரு காளியைக் குத்துவலி யாக்கிமிகு தாரகனைக்
கொல்லென விடுத்தருள் புரிந்தசிவன் மேவுமலை கூறிவினவில்
பல்பல இருங்கனி பருங்கிமிக வுண்டவை நெருங்கி இனமாய்க்
கல்லதிர நின்றுகரு மந்திவிளை யாடுகா ளத்திமலையே'

என்ற பாடல் இன்பம் தருவதொன்றாகும்.

இவ்வாறு இயற்கை இன்பத்தைப் பருகிப்பாடிய பாவாணர் பாடல்கள் பல. உளமுருக்கும் இத்தகைய பாடல்களை நாம் உணர்வுடன் அறிவுக் கண்கொண்டு காண்போமேயானால் கவிஞனுக்கும் இயற்கைச் செல்வத்துக்கும் உள்ள தொடர்பு விளங்காமற்போகாது.

இம்முறையே இயற்கை நலங்களையெல்லாம் செல்வம் என்னலாமோ? அவை என்ன நல்கும்? பொன் நல்குமா? பொருள் நல்குமா? மண்ணல்குமா? மனை நல்குமா? என்று சிலர் வினவலாம். வினவியும் உள்ளனர். அந்தோ! அவர்கள் நிலை இரங்கத்தக்கதே! செல்வம் என்பது எது? பொன்னும் பொருளுமா? மண்ணும் மனையுமா? பல்லாயிரக்கணக்கான மக்கள் பட்டினியில் பரிதபிக்கத் தான் ஒருவன் பல அடுக்கு மாளிகையில் பலவகை யுண்டி யுண்டு வாழ்ந்திருப்பதா? அல்லவே அல்ல. செல்வம் என்பது அவரவர் மனத்தைப் பொருத்ததே! கவிஞன் உலகே வேறு-கற்றவர் உலகே வேறு. அவர்கள் நிலைத்த செல்வம் தேடுவர். பொருளாசை பெற்ற ஒருவன் இராப்பகலாகப் பொருள் தேடிப் புதைத்து வைத்து வறிதே கழிவன். ஆனால், அந்தப் பொருள் அவனுக்கு என்றும் உதவுங்கொல்? அவன் தேடும் பொருளே அவனது முடிவை நல்கினும் நல்கும். பொருள் என்பது-செல்வம் என்பது என்ன? கூழுக்கு அலமரும் ஏழைக்கு அன்று கிடைக்கும் அரைக்காசும் செல்வந்தான். கப்பல் உடைந்த காலத்தில் நீரில் ஆழும் ஒருவனுக்கு அவன் பையில் நிறைந்து அவனை ஆழ்த்தும் ஆயிரக்கணக்கான பொன்னும் சவரனும் இயமன் தான். அவற்றை அவன் வீசி எறியின் நிறை குறைந்து ஒரு பொருளைப்பற்றிக் கரை ஏறினும் ஏறுவன். ஆகவே செல்வம், பணம் என்பனவெல்லாம் என்றும் உதவுவன அன்று. எல்லார்க்கும் ஒத்ததும் அன்று. ஆனால், இயற்கைச் செல்வத்தை யாரும் கொள்ளை கொள்ள முடியாது. அது யாவர்க்கும் உரிய பொருள். இயற்கை அன்னை அனைவரையும் அணைப்பாள். அவள் நலமறிந்தார் அவளைப்போற்றுவர். அல்லார் வறிதே கழிவர்.

படக்கடையிலே பல்வேறு படங்களைக் கடைக்காரன் வைத்திருக்கின்றான். அவனுக்கு அவற்றினால் வரும் இன்பம் வாங்கின விலைக்குக் கூட்டி விற்றலிலேயே அமையும். ஆனால் அவற்றை ஆழ்ந்து அநுபவிக்கும் கண்களையும், உணர்ந்து அறியும் உணர்ச்சியையுமுடைய ஒருவனுக்கோ அப்படங்களே அழியாச்செல்வங்கள். கடைக்காரன் வேண்டிய பொருளைக்கொடுத்து அதை வீட்டுக்குக் கொண்டு வந்து தன் எதிர் அமைத்து என்றும் கண்டு மகிழ்வான். அவன் உள்ளம் அந்த இன்பத்தையன்றி வேறு இன்பம் அறியாது. ஆகவே அது அவனுக்குச் செல்வம். கவிக்கு இயற்கைக்காட்சி எல்லாம் செல்வம். நிற்க,

இவ்வாறான இயற்கை இன்பத்தை உலகில் கவிஞர் என்றும் அநுபவித்து வருகின்றனர். எந்நாட்டுக் கவிஞனும் தான் வாழும் உலகைப் பொதுவுலகாக மதிக்கின்றான். அவன் ஒருவனுக்கும் அடங்கி நடக்கவேண்டியதில்லை. 'நாம் யார்க்கும் குடியல்லோம்' என்னும் நெஞ்சுடன் அவன் தான் விரும்பினவிடங்களெல்லாம் விரைந்தேகி இயற்கை இன்பத்தைப் பருகுகின்றான். அவனது கவி உலகில் யாதொரு வேற்றுமையும் கிடையாது. 'எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம்' என்று வாய்விட்டுப் பேசுவான்; பாடுவான். அவனது நண்பரும் உறவினரும், இயற்கையும் ஏழைகளுந்தான். அவன் ஏழைப்பங்காளன். இவ்வாறு இயற்கைப் புலவர்கள் எக்காலத்தும், எந்நாட்டிலும், எச்சமயத்திலும், எம்மொழியிடத்தும் வாழ்கின்றார்கள். அத்தகைய அரும் பெரும் புலவர்தம் பாடல்கள்தாம் பொன்றாத புகழ் பொருந்திய பெட்டகங்கள். ஒவ்வொரு மொழியிடத்தும் அப்பெட்டகங்கள் அமைந்துள்ளன. தமிழ் மொழியிடத்துத் தழைத்தன பல. அவைகளை ஓம்புவது தமிழர் கடன் - தலையாய கடன். தமிழர் தம் கலையை ஓம்பி நலம் புரப்பார்களாக!

# என்ன வேண்டும்?

என்ன வேண்டும் என்ற கேள்விக்கு எத்தனையோ விதமான விடைகள் எழும். அவரவர் மனப்போக்குக்கு ஏற்றவகையில் விடை அமையும். இந்திய நாட்டு மக்கள் உள்ளத்தே சுதந்திரம் என்ற விடை தோன்றும். ரஷ்யா மக்கள் உள்ளத்திலே உலகப் பொதுவுடைமை என்ற உணர்ச்சி தோன்றும். ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் ஒவ்வொரு உணர்ச்சி அரும்பல் இயற்கை. அவரவர் உணர்ச்சிவழியே அவரவர் நாடு இயங்கி உணர்ச்சியை முற்றுவிக்கும் என்பது உறுதி.

தமிழ் நாட்டுமக்கள் உள்ளத்தே இன்று உணர்ச்சி அலை என்றும் இல்லா அளவில் அதிகரித்துள்ளது. தமிழ் மொழியையும் நாட்டையும் முன்னுக்குக் கொண்டுவர வேண்டும் என்று தமிழன் பேரார்வங் கொண்டுள்ளான். உணர்ச்சி வழியேசொல்லும், செயலும் அமைதல் வேண்டும் அவை ஒருங்கு அமையின் வேண்டிய அனைத்தும் பெற யாண்டும் மாறுபாடு தோன்றாது.

தமிழ் நாடு பல்வேறு வகையில் சிதறிக் கிடக்கின்றது. இன்று நாட்டில் நேரும் பிணக்குகளுக்குக் கணக்கில்லை. உலகமெலாம் அறிவியல் ஆராய்ச்சி போன்ற துறைகளில் விரைந்து முன்னேறும் இக்காலத்துத் தமிழன் தலை குனிந்து நிற்கின்றான். சிலர் தம் பண்டைப் பெருமையைப் பற்றிப் பேசுவதிலேயே காலம் கழிக்கின்றனர். பழமை என்பது சிறந்ததுதான். இன்று தமிழ் நாட்டிற்கும் அதன்மூலம் உலகுக்கும் செய்யும் சிறந்த செயல் யாது என்றால் கூறத்தக்க பதில் ஒன்றும் இல்லை. நாட்டில் இன்று எத்தனையோ பிணக்குகள் தோன்றியுள்ளன. சாதியின்பேரால் பிணக்கு; சமயத்தின் பேரால் பிணக்கு; நீதியின் பேரால் பிணக்கு; மொழியின் பேரால் பிணக்கு;

கலையின் பேரால் பிணக்கு; இன்னும் இதுபோன்ற பிணக்குகள் எத்தனையோ உள்ளன. தமிழன் இப்பிணக்குச் சுழிகளின் இடையில் அகப்பட்டு, அம்மம்ம! அல்லலுற்று அவதிப்படுகின்றான். அவனது தூய உள்ளம் இவைகளால் மாசுபடுகின்றது. அவன் மதி கெடுகின்றது. விரைந்து செல்லும் உலகச்சுழற்சியிடையில் அவன் அலமந்து நிற்கின்றான். இந்நிலை நீங்கும் நாள் அண்மையிலுள்ளது. 'தமிழ்நாட்டு மக்களே! ஒன்றுபடுங்கள்' என இயற்கை அன்னை எச்சரிக்கை செய்கிறாள். அவள் வழி அனைவரும் நடப்பார்களாக!

தமிழ் மொழியின் வளம் கருதித் தமிழர் அனைவரும் ஒன்றுபட்டு உழைத்தல் இன்றியமையாத தொன்றாகும். தமிழ் மொழி இந்திய நாடு முழுதும் ஆண்டமொழி என்று பண்டைப்பெருமை பேசிக் காலங்கழித்தல் எல்லாம் போதுமென எண்ணி, இன்றைத் தமிழுக்கு ஏற்றன செய்தல் அறிஞர் கடன். தமிழ் மொழிக்குச் செய்யவேண்டிய பணிகள் கணக்கில. பணி செய்வாரற்றுத் தமிழன்னை தன்வளவில் சுருங்க வேண்டியவளாயுள்ளாள். தமிழ் நாட்டைச் சேய் மொழிகள் பற்ற ஆரம்பித்து விட்டன. தாய்மொழியாம் தமிழ் அவற்றிற்கு இடங்கொடுத்து வருகிறது. தமிழன் 'எதுவரினும் வருக' என்று வாளா உறங்கிக்கிடக்கின்றான் 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே-இன்பத்-தேன் வந்து பாயுதென் காதினிலே' என்ற உணர்ச்சி ஒவ்வொரு தமிழன் உள்ளத்திலும் உதிக்கவேண்டும். தமிழ் நாட்டிடைத் தோன்றித் தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட அனைவரும் ஒன்று சேர்ந்து ஆக்கவேலைக்கு ஆவன செய்ய வேண்டும். பாரதியார் இன்று தமிழ் உள்ள நிலை கண்டு வருந்தி, அன்னை வாயிலாகவே நமக்கு ஆணையிடுகின்றார்:-

"புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
    பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்த வளருது மேற்கே—அந்த
    மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை

சொல்லவும் கூடுவதில்லை—அதைச்
சொல்லும் திறமை தமிழ்மொழிக்கில்லை

மெல்லத் தமிழ் இனிச்சாகும்—அந்த
மேற்குமொழிகள் புவிமிசை ஓங்கும்

என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ!
இந்தவசை எனக் கெய்திடலாமோ

சென்றிடுவீர் எட்டுத் திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்"

என்பது அவரது உருக்கமான அடிகள். தமிழன்னையின் வளர்ச்சி கருதித் தமிழர் அனைவரும் ஒன்றுபடல் வேண்டும். ஒன்றுபட்டுப் பாரதியார் கூறிய பண்புகளை மனத்தமைத்து ஆற்றுவ ஆற்றவேண்டும். ஆங்கிலம் அறிந்த தமிழர் அன்னை மொழிக்கு ஆற்றவேண்டுவ பல. புத்தம் புதிய கலைகளைப் பிறநாட்டு மொழிகளிடமிருந்து மொழிபெயர்த்து உதவல் வேண்டும். தமிழ் நாட்டிலுள்ள உயர்ந்த நூல்களைப் பிற மொழிகளில் பெயர்த்தெழுதி அவற்றின் புகழை உலக மெலாம் அறியும் வகைசெய்ய வேண்டும். வள்ளுவர் திருக் குறள் இன்று உலகம் அறிந்த நூலாகி விட்டது. ஜாதி மதச் சுழிகடந்து எந்நாட்டவரும் இயைந்து போற்றும் வகையில் அக்குறள் அனைவருள்ளத்தும் இடம் பெற்றது. அதுபோன்றே பழைய அருங்கலைகள் தமிழிடத்துள்ளன. அவைகளையெல்லாம் மொழிபெயர்த்து உலகுக்கு அளிக்க வேண்டுவது அறிவறிந்த அறிஞர் கடன்.

தமிழ்நாடு மிகத்தொன்மை வாய்ந்தது. தமிழ் மொழி பிறமொழிகளுக்கெல்லாம் முந்தியது என ஆராய்ச்சியாளர் அறுதியிட்டுக் கூறுகின்றனர். தமிழர்தம் சரித்திரம் சரி யானவகையில் எழுதப்படல் வேண்டும். அச்சரிதம் இன் னும் புதை பொருளாகவே உள்ளது. உலகசரித்திரம் எழுதும் பெரியார்களெல்லாம், இதன் அருமை அறிந்திருந் தும் இதை அவ்வளவு சிறப்பாக ஓம்புவதில்லை என்று கூற லாம். தமிழர் தம் நாட்டுச் சரித்திரத்தைச் சரியாக எழுத முற்படல் வேண்டும். நமது பெருமைகளை யெல்லாம்

நாம்மட்டும் வாயாரப் புகழ்ந்து கொண்டிருந்தால் அது பயன் தராது. வெளி நாட்டு மக்களும் நாட்டுக்கலைகளை விரும்பும் வண்ணம் நம்நாட்டுச் சரித்திரத்தை அமைத்தல் வேண்டும்.

'பிறநாட்டு நல் அறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புது நூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதை வணக்கம் செய்தல் வேண்டும்'

என்ற பாரதியாரின் வேண்டுகோள் ஒவ்வொரு தமிழன் உள்ளத்தேயும் கால் கொள்ள வேண்டும்.

'காழ்ப்பு' என்னும் கொடியநோய் ஒன்று தமிழ் நாட்டிடை இன்று தாண்டவமாடுகின்றது. ஒருவர் உள்ளத்திலும் தூய்மை இல்லை. கலை அறிந்தவரும் மாறுபட்டுக் கலாம் விளைக்கின்றனர். எங்கணும் அமைதி இல்லை என்றே சொல்லலாம். 'தமிழ் மொழி பேசுபவர் யாரும் தமிழர்' என்ற மனப்பான்மை தமிழர் உள்ளத்தே நிகழ்தல் வேண்டும். தமிழ்க்கலையை எவ்வாற்றானும் வளர்த்தலே தலையாய கடன் என்ற உணர்ச்சி அரும்பல் வேண்டும். சாதி, மதம் முதலிய எல்லாவற்றினும் வேறுபட்டாலும் தமிழ்மொழி அனைவரையும் ஒன்று படுத்துகின்றது. ஆகவே தமிழ் மண்ணிடைப்பிறந்த ஒவ்வொருவரும் தமிழ் மொழிக்கு வேண்டிய ஆக்கப்பணிகளை ஆற்றல் வேண்டும்.

கலைவழியே வேறுபாடு காண்பதும் இயற்கை ஆகிவிட்டது. மனவேறுபாட்டின் காரணமாகக் கலை வேறுபாட்டையும் புகுத்தல் நேரிதன்று. தமிழ்க்கலைகளின் உயர்வு கண்டு ஓம்பவேண்டுவது அறிஞர்கடன். 'தலைநிமிர் தமிழா' என்று ஒவ்வொருவர் உள்ளமும் நிமிர்ந்து நடக்க வேண்டும். பண்டை மொழிகளில் ஒருசிலவே இன்று பேச்சு வழக்

கிலும், எழுத்து வழக்கிலும் இருந்து வருகின்றன. அவற்றுளெல்லாம் தலைசிறந்ததாகக் கருதப்படுவது தமிழ் மொழி. இம்மொழியிடத்து இல்லாத பொருளொன்றும் இல்லையால் என்று உலகம் போற்றும்படி ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளை ஆற்றவேண்டும். கலையினிடத்துக் கட்சிவேறுபாடுகளைப் புகுத்தல் நேர்மையாகாது. ஜர்மானியரது கொலைத்தொழில் கண்டு உலகம் நடுங்குகின்றது. ஜர்மனியை எவ்வாற்றானும் அடக்கி ஒடுக்கவேண்டும் என்று ஆங்கிலேயர் ஆர்வமுறுகின்றனர். அதே சமயத்துக் கலை வளர்த்த ஜர்மன் பேராசிரியன் 'கதே' என்பவரைப் போற்றுகின்றனர். ஆங்கிலேயரும் உலகமக்களும் 'கலையளவில் எதையும் ஏற்றுக்கொள்வதில் இழுக்கில்லை.' என்கின்றனர். பிறவற்றில் அவரவர்தம் மதியே சால்புடைத்து.

ஆகவே தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் தமிழர் அனைவரும் ஒன்று பட்டுச், சிறு வேற்றுமைகளை யெல்லாம் அறக்களைந்து, தமிழ்க்குப் பாடுபடுதலே தலையாய கடன் என்பதை உணர்ந்து, இத்தமிழ்ச்'சுவை தவிர யான் போய் இந்திரலோக மாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' என்ற கொள்கை உடையவர்களாகிச் சொல், செயல், நினைப்பு ஆகிய மூவழியிடத்தும் தமிழ்ப்பணிகளை உருவாக்கி, 'விரைந்து முன்னேறும் உலகில் தமிழர் சமூகமும் உளது, தமிழ் மொழியும் உளது, தமிழ்நாகரிகமும் உளது' என்றும் உலகுக்கு எடுத்துக்காட்டி ஒன்றி வாழவேண்டும். இவ்வாழ்க்கையை அன்னை விரைந்து அருள் புரிவாளாக!

நிற்க, இந்திய நாட்டின் தேவையைச் சற்றுச் சிந்தித்தலும் சாலும். உலக நிலையிலே பிறநாடுகளை யெல்லாம் நோக்கும்போது நமது இந்தியநாடு இருக்கும் நிலையை எண்ணுதிருக்க முடியவில்லை. கலையுலகில்-செல்வ உலகில்-அறிவியல் உலகில்-அனைத்துலகிலும் இந்தியாவின் இடம் குறைவாகவே காணப்படுகின்றது. எல்லா வகையிலும் இந்நாடு ஏற்றமுறவேண்டும். தென்குமரி வடபெருங்கல் இடையுள்ள இந்தியநாடு எந்நலமும் பெறவேண்டுமென்பது சொல்

லாமலே அமையும். போருக்குப் பிற்காலத்தே அரசியலார் கல்வி, கைத்தொழில், வாணிபம், நலத்துறை முதலிய அனைத்து நெறியிலும் ஊக்கங்காட்டி அவைகள் உயர்ந்தோங்கவழி கோலி வருவது கண்டு உளத்தே சிறிது மகிழ்வு பிறக்கின்றது. இந்திய நாட்டுக் கிராமங்களெல்லாம் முன்னேறவேண்டும். அதற்கு அவசியமாக வேண்டுவது கல்வியும், கைத்தொழிலுமேயாம். வருங்கால இந்தியா எந்நலனும் பெற்றுச் சிறக்க என வாழ்த்துதும்!

இந்நிலையில், உலகைப்பற்றியும் சிறிது சிந்தித்தல் வேண்டும். போர் விரைந்து நடைபெறுகின்றது. கொடியோர் பலமெலாம் ஒடுக்கப்படுகின்றது. உலகமெங்கணும் சமாதானம் நிலவ வேண்டும் என்று எல்லா மக்களும் விரும்பவேண்டும். போர் உலகிடை இருந்தே தான் தீரும் எனச் சிலர் எண்ணினும், இல்லாது செய்தலும் கூடும். நல்லார் மனம் விரும்பின் எல்லாம் இயலும். உலக நல்லவர் எல்லாம் ஒருங்கு கூடி உலகை இன்ப உலகாக-அன்பு உலகாக - உண்மை உலகாக - உணர்ச்சி உலகாக ஆக்குவார்களாக! அவர்தம் நன்முயற்சிக்கு இறைவனும் அருள் செய்வான். எந்நாடும் நன்றாக விளங்கும். பொன்னுலகைப் புவியில் படைக்கலாம். அத்தகைய பொன்னாள் விரைந்து புலர்க என வாழ்த்துகின்றேன். எங்கும் இன்பம் இயைக! வாழ்க என்றும் வளஞ்சால் தமிழ்மொழி! உலகிடை என்றும் ஓங்குக உயர்வே!